# NAVARATHRI LECTURES

# நவராத்திரிப் பிரசங்கங்கள்



சென்னைக் காமைசிஸ் காலேஜ் தலைவராகிய

எம். எஸ். பூர்ணலிங்கம் பிள்ளை, பி.ஏ., எல். டி.

அவர்களால் வரையப்பட்டன.



பற்பலநாளும் பழுதின்றிப் பாங்குடைய
கற்றலிற் காழினிய தில்—பூதஞ் சேந்தனுர்.

உத்தம நன்னெறிக்க ணில்வாழி நெஞ்சே
உத்தமநன்னெறிக்க ணின்றாக்கஞ் செய்தியேல்
சித்தப்படாத தென்வாழி நெஞ்சே—வளையாதி.

**R. VENKATACHALAM & CO.,**
***60, PYCROFT'S ROAD,***
**TRIPLICANE.**

1917

 [*Price As.* 0—5—0.

# CONTENTS.

## உள்ளுறை.

# நவராத்திரிப் பிரசங்கங்கள்.

## முன்னுரை.

"நண்பர்களே, நமக்கு நவராத்திரிக்கொண்டாட்டத்திற்காக இரண்டுவாரம் விடுமுறை கிடைத்திருக்கின்றது. இதை எவ்வாறு கழிக்கின்றதென்று நாம் கூடி ஆலோசனை செய்ததில் ஒருவாறு தீர்மானத்திற்கு வந்திருக்கின்றோம். பதின்மராகிய நம்மவரில் ஒருவர் அக்கிராசனம் வகிக்க, இரவுதோறும் எவரேனு மொருவர் ஏதேனு முபயோகப் படத்தக்க விஷயத்தைப்பற்றிப் பிரசங்கஞ் செய்யவேண்டும். இவ்வாறு செய்வோமாயின் ஒன்பது இரவிலும் ஒன்பது அருமையான பிரசங்கங்கள் நிகழும். பத்தாந்தினத்தில் அக்கிராசனுதிபதியின் பிரசங்கமானதும் அவர் முடிவுரைகூற நம் கொண்டாட்டம் பூர்ணமாகும்." இவ்வண்ணம் ஆதித்தன் எடுத்தோதவும் நிறைமதி, செவ்வி, அற்புதன், சற்குரு, சுக்கிரன், சனிபதி, கேதுரு, இராகை, சம்பூரணர் சரியென்று ஆமோதித்தனர். உடனே தம்மில் எவர் தலைமை வகித்தற்குத் தகுதியரென்றறியுமாறு திருவுளச்சீட்டுப் போட்டனர். சம்பூரணரின் பெயருள்ள சீட்டு எடுக்கப்பட்டது. இவரை மற்றனைவரும் அங்கீகரித்தனர். தலைவர் பின்வருமாறு வந்தன மளித்தனர்.

"அன்பர்காள், இந்த ஆண்டு நவராத்திரி யுற்சவகாலத்தில் நடத்தக்கருதிய பிரசங்கங்கட்கு என்னைத் தலைமை வகிக்கத் தெரிந்தெடுத்திருக்கின்றீர்கள். இது திருவுள சம்மதமானதால் நான் தலைவனுயிருக்கத் துணிகின்றேன். இறை

வனுக்கும் உங்களுக்கும் மனப்பூருவமாக வந்தனமளிக்கின்றேன். உங்களில் ஒவ்வொருவரும் அவைவிதி அறிந்தவர்களாதலால் தலைமைவகித்தல் பாரமாகாது. அனைத்துஞ் செவ்வனே நடைபெறுமென்பது திண்ணம்." அவனன்றியோர் அணுவுமசையாது " என்பது ஆன்றோர் வாக்காம். சரிதத்திற் காணப்படும் எப்பெரும் போரினும் தற்சமயம் நிகழும் ஐரோப்பிய யுத்தம் எவ்விதத்திலும் பெரிதாயிருப்பதால், இதில் நம்மிறைக்கு வெற்றியளிக்க ஈசனைத்தியானிப்போமாக." அனைவரும் எழுந்து நின்று கடவுள் வழிபாடு செய்தனர்.

"கோல்கோடி மாராயன்
செய்யாமை முன்னினிது, செங்கோல னுகுதல்
எய்துந் திறத்தா லினிதென்ப."

"கோவினுக் கருங்கலங் கோட்ட மில்லது
நாவினுக் கருங்கல நமச்சிவாயவே"

# முதல் இரவு.

நளவருஷ நவராத்திரிப் பிரசங்க ஏற்பாடு எங்கும் விளம்பரஞ் செய்யப்பட்டிருந்ததனுல் பழவூர் வாசிகள் பலரும் புரட்டாசிமாதம் ஒன்பதாந்தெய்தியாகிய ஞாயிற்றுக்கிழமையன்று ஞாயிறு பட்டவுடன் நதிக்குச்சென்று உடம்பு சுத்திசெய்து திருநீறணிந்து சந்தியாவந்தன முடித்தபின், அவ்வூர்ச் சித்திரமண்டபத்தில் வந்து குழுவினர். பிரசங்கிகள் பதின்மரும் தங்களுக்குரிய விடங்களிலமர்ந்தனர். ஆதித்தன் ஸ்ரீமான் சம்பூரணரைத்தலைமை வகிக்கவேண்டினர். அவர் அங்ஙனங்கூறவும் தலைவர் நவராத்திரி யுற்சவ வரலாற்றைப் பின்வருமாறு எவரும் வியக்கப்பேசினர்.

“சிவநேசச்செல்வர்காள், இன்றுயான் முதன் முதலில் நவராத்திரியைப்பற்றிச் சிறிது என்னறிவ வறிவானுபவத்திற் கியன்றவாறு கூறுவேன். இந்த வுற்சவம் தசராப் பண்டிகை யென்றும் நவராத்திரி யுற்சவமென்றும் பெயர் பெற்றுப் பரதகண்டமெங்கும் விளங்கிவரும். இதனுரம்பத்தைப்பற்றிப் பல்லோர் பலவாறுகூறுவர். புரட்டாசி மாதத்தில் இதை நடத்துவதேன் என்று சற்றுன்னுவமேல் உண்மை விளங்கும். பூகோளசரித்திரகாரர் உலகை வடபாதி தென்பாதிகளாகப்பிரித்துச் சமரேகை யொன்றுளதாகக் கற்பித்துளர். வடபாதியில் தரைமிகுந்தும் தென்பகுதியில் நீர்மிகுந்துமுள்ளன வென்றும் உரைத்திருக்கின்றனர். பரதகண்டத்தார் வானுலகைப் பன்னிரு இராசிகளாகப்பிரித்து அவற்றைப் பன்னிருமாதங்களிற் சூரியன்தரிசித்துவர நமக்கு ஒருவருட மாகின்றதென்றும், நமக்கு ஒருவருடம் தேவர்களுக்கு ஒருதினமென்றும், மேடமுதல் துலாம்வரை அன்னுருக்குப் பகலென்றும், பின்னுறுமாதங்களும் இரவென்றுங் காட்டியிருக்கின்றனர். முற்பகுதியை உத்தராய

னமென்றும், பிற்பகுதியைத்தக்ஷணாயனமென்றுங் கூறுவது வழக்கம். ஆவணிஞாயிற்றுக்கிழமைதோறும் நம்மனையார் முற்றத்திற் பொங்கலிடுதலைக் கவனித்திருப்பீர்கள். ஆதித்தன் கன்னிமண்டல மொழிந்து துலாத்திற் பிரவேசிப்பானாதலால் எவ்வுயிர்க்கும் இன்றியமையாத ஞாயிறை இனிக்காண இருமூன்று மாதமாகுமே யென்று நினைத்து அவன் கிருபைதங்குமாறு அவனைவந்தித்தல் உலகவழக்காம். உத்தரவீதியிலிருந்துவந்து சமரேகையைக் கடந்து தென்வீதி செல்லக்கருதி துலாத்திற்புகுவதற்கே துலாயனமென்றுபெயர். இம்மதிதொட்டு மேகமிகுந்து மழைபொழியும். மழைகாலத்தில் சூரியசந்திரர்களைக் காணுதலேஅரிது. இக்காலத்தில் மானிடருக்குப் பிணி பல வெய்தும். பிணியுறுவண்ணம் நவக்கிரகங்களுக்கு வழிபாடுசெய்தல் புராதன முறை. துலாமாதவாரம்பத்தில் ஒன்பது கிரகங்களுக்கும் முறையே பூசைசெய்வர் பெரியோர். பிணிகளைப் பூதங்களாகப் பாவித்து மழையிருளிலுலாவும் பூதங்கள் மனிதரைப் பிடிக்காவண்ணம் துர்க்கையாகிய காளியம்மைக்கு நவசத்தியேற்படுத்தி ஒவ்வொரு சத்தியின் பிரீதிக்காக ஒவ்வொரு நாளுற்சவங் கொண்டாடுவதாகவும் உரைப்பர் ஒருசாரார். பெரும்பாரதயுத்த காலத்தில் அர்ச்சுனன் ஒன்பது தினம் தெய்வவழிபாடுசெய்து பத்தாம்நாளில் வெற்றிபெற்றனனாதலால் நவராத்திரி கழிந்த மறுநாட்கு விஜயதசமியென்ற நாமம்வாய்ந்த தென்பர் இதிகாச நூலார். இவையன்றி இலக்ஷ்மி, சரஸ்வதி, துர்க்கைதேவதைகளை இத்துலாயன காலத்தில் தொழ வேறு நியாயமுமுண்டு. வெயிற்காலத்தில் வீரர்கள்வெற்றிநோக்கிவேறிடஞ்செல்லுவர்.வாணிபர் பேரூதியங்கருதிப் பிறதேசம் போவர். இத்தகையார் தம்மூருக்குத் திரும்பவருங் காலம் மழை காலமே. சுதேசமிருந்து சேய்திருத்திப் பலவாறாகிய தொழிற்செய்பவரும் வீடடங்கி

யிருக்குங்காலம் மாரிகாலமேயாம். ஆக்கைக்கே யிரைதேடி யலமந்து திரும்பும் இம்முப்பாலரும் மழை, பனி, கூதிர் தீரும்வரை வீட்டில் வைகி மக்கள் பெண்டிருடன் அளவளாவியும், கலைகளைக் கற்றுணர்ந்தும், பிணிநெருங்காத வண்ணம் பிணிசெய் தெய்வங்களை ஆராதித்தும், பன்னாட்பேருதவியாயிருந்த ஆயுதங்களைவைத்து வணங்கியும் வருதல் இயற்கையன்றோ. இக்காரணம்பற்றியே நவராத்திரிகழிந்த பத்தாந் தினம் தசராவென்றும், விஜயதசமியென்றும், சரஸ்வதி பூஜையென்றும், ஆயுதபூஜை நாளென்றும் வழங்கி வருகின்றது. நாம் பதின்மரும் கலாசாலை மாணவராதலின் இப்பத்துநாட்களிலும் பிரசங்க வாயிலாய் நாமகளை வழுத்துதல் நமது இயற்கையாம். கலைமகள் கடாக்ஷத்தால் எடுத்தகாரிய மிடையூறின்றி ஏற்றமுறுக."

தலைவர் பேசிமுடிந்ததும் விதித்தமுறையே முதலில் ஆதித்தன் "இந்தியரின் இராஜபக்தி" யைப்பற்றித் தான் வரைந்த வியாசத்தை வாசிக்கலாயினன்.

## இந்தியரின் இராஜபக்தி.

ஒற்றினு னொற்றிப் பொருள்தெரிதல் முன்னினிதே
முற்றான் தெரிந்து முறைசெய்தல் முன்னினிதே
பற்றிலனுய்ப் பல்லுயிர்க்கும் பாத்துற்றுப் பாங்கறிதல்
வெற்றல்வேல் வேந்தர்க் கினிது.

கனவான்களே, நம் இந்தியாவில் முற்காலங்களிலிருந்த மாந்தரனைவரும் அவ்வக்காலங்களிலிருந்த அரசர்களிடத்திற் பக்தியுடையரா யொழுகினர்கள். இவ்வுண்மை அக்காலத்தி லியற்றப்பெற்று இப்பொழுது நாமெல்லாம் படித்துணரத்தக்க பெருமை சான்ற காப்பியங்களான் இனிதறியப்படும். மாந்தரது அகவிருளாகிய அஞ்ஞானத்தை நீக்

குங் கல்வியும், உலகத்திலுள்ள புறவிருளை நீக்குஞ் சூரியனும், மாந்தர்க்கு அநீதியாகிய காரிருளை நீக்குங் காவலனும் ஆகியஇம்மூவரும் மக்கட்கு மூன்று கண்கள். அக்கண்களுள் முதற்கண் காவலனும், இரண்டாங்கண் கல்வியும், மூன்றாங்கண் சூரியனுமென நூல்கள் வகைப்படுத்தோதின.

> "கண்ணெனப் படுவ மூன்று காவலன் கல்வி காமர்
> விண்ணினைச் சுழல வோடும் வெய்யவ னென்னும் பேர
> வெண்ணினுட் டலைக்கண் வைத்த கண்ணஃ தில்லை யாயின்
> மண்ணினுக் கிருளை நீக்கும் வகை பிறிதில்லை மன்னே"

என்று நன்கெடுத்தோதினர் சூளாமணியுடைய தோலாமொழித்தேவர்.

வைத்தியன் மக்களது உடலொன்றையே தனது மருந்துசளானுஞ் சிகிச்சைகளானுங் காக்கவல்லன்; நியாயவக்தாவோ மாந்தரது பொருளொன்றையே தனது சட்ட வுணர்ச்சியானும், நியாயநூற்பயிற்சியானும், யுக்திகளானும் பாதுகாக்க வல்லன்; குருவோ மனிதரது ஆன்மா வொன்றையே தனது வன்மையான் மலபந்தத்தினின்றும் நீத்துக் காக்க வல்லன். மக்களது உடல் பொருளாவி மூன்றையுந் தனித்தனி முறையே பாதுகாக்கவல்லார் வைத்தியனும் நியாயவக்தாவும் குருவுமென்ப தேற்பட்டதே யொழிய இவை மூன்றையும் ஒருங்கே காக்கவல்லார் அவரென்ப தேற்படவில்லை. அவர் இவையனைத்தையு மொருங்கே காக்கவும் வல்லரல்லர். மற்று யாவரே அவ்வாறு காக்கவல்லாரெனில், அரசனே. தன்னானுந் தன் பரிசனத்தானும் பகைவரானும் மக்கட்கு இடுக்கண் நேராதவாறு அவரது உடல் பொருள்களைக்காத்து வருதலான் வேந்தனே மாந்தரது உடல் பொருளாவி மூன்றையு மொருங்கே காக்கவல்லன்.

"மாநிலங்கா வலனுவான் மன்னுயிர்காக் குங்காலைத்
தானதனுக் கிடையூறு தன்னுற்றன் பரிசனத்தா
லூனமிகு பகைத்திறத்தாற் கள்வரா லுயிர்தம்மா
லானபய மைந்துந்தீர்த் தறங்காப்பா னல்லனோ?"

என்றார் பெரியபுராணமாக்கிய சேக்கிழார் சுவாமிகள். இதனாலே மன்னவன் மாந்தரது உடல் பொருள்கள் காக்குமாறு பெற்றாம்.

"அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்
நின்றது மன்னவன் கோல்"

என்றார் திருக்குறளருளிய தெய்வப்புலமைத் திருவள்ளுவனார். இன்னும்,

"மாதவர் நோன்பும் மடவார் கற்புங்
காவலன் காவ வின்றெனி னின்றால்"

என்றார் மணிமேகலையாசிரியர் மதுரைக் கூலவாணிகன் சாத்தனார். இவற்றினானே யரசன் மக்களது ஆவியைப் பாதுகாக்குமாறு பெற்றாம்.

மேற்கூறியாங்குத் தன் கீழிருக்குங் குடிகளைப் பாதுகாக்குங் கோமானை மறக்கவு மொண்ணுமோ? கடவுளிடத்துப் பக்தியுடையராதல் போலக் காவலனிடத்தும் மக்கள் பக்தியுடைய ராவரன்றே.

"உறங்கு மாயினு மன்னவன் றன்னொளி
கறங்கு தெண்டிரை வையகங் காக்குமால்"

என்றார் சீவகசிந்தாமணி செய்த திருத்தக்கதேவரும்.

மேற்கூறியவாறு அரசனுக்குங் குடிகளுக்குமுள்ள வியைபினை, நன்குணர்ந்தவராகிய நம் இந்தியர்கள் தம்மன்

னவர் ஜாதியினுலும் சமயத்தினுலும் வேறுபட்டவராயி னும் அன்னூர்க்கடங்கி அவராணை வழியொழுகும் இராஜ பக்தர்கள் என்பது வெளிப்படை. 'வல்லான் வகுத்ததே வாய்க்கால்' என்றிருந்த முற்காலங்களிலேயே நம் இந்தி யர் நிலைமை இற்றென்ருல், எளியரையும் வலியரையும் வேறுபாடின்றி ஒரு தன்மையராய்ப் பாராட்டி நடத்தும் நடுவுநிலைமையும் நீதியும் வாய்ந்த நம் ஆங்கில வரசாட்சிக் காலத்தில் இந்தியர்களிடத்தில் இராஜபக்திக் குறைவு எங்ஙனம் ஏற்படும்? ஒருநாளும் எற்படாதென்பது திண்ணம்.

"அரசனுங் குடிகளு மம்ம வேறலர்
உரைசெயி னுயிருலா முடல மாவரால்."—மதிவாணன்.

"நன்னெறி வழுவா மன்னவன் றனக்கு
நாடெல்லாம் பேராண்—உலகின்
மன்னுயி ரெல்லாம் அவன்படை—அன்னோர்
மனமெலா மவனுறை பீடம்."—நீதிநூல்

## இரண்டாம் இரவு.

முறைபடியும் சோமவாரத்தன்று இரவில் ஏழுமணிக்குப் பழவூரார் மண்டபமெய்தினர். ஸ்ரீமான் சம்பூரணர் முன்வர, அவருடன் ஒன்பதின்மரும், சிவநேசக்குழாம் கரகோஷஞ் செய்ய, சபைவந்துற்றனர். காலந்தாழ்க்காது சபையி னதிப ரெழுந்து,

உலகெலா முணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்

என்ற பாசுரத்தைப் பண்ணுடனோதவும் பலருமகிழ்ந்தனர். பின்னர் தலைவர் நிறைமதி என்பவரைநோக்கி அவர் அன்றிரவு எடுத்தாளக்கருதிய "நங்குறைகள்" என்பதைப்பற்றி யுபந்நியசிக்க வேண்டினர். அவரும் எழுந்து தலைவருகே சென்று பின்வருமாறு பேசத்தொடங்கினர்.

### நம்மவர்கள் குறைகளேவை?

"சகோதரர்களே, சீமான்களே—இளஞனுகிய யான் 'நங்குறைகள்' இன்னவை யெனக் கூறத்துணிந்ததுபற்றி மன்னிப்பீர்களாக. தங்குறைகளை யுணராதார் திருந்திலர். பிறர்குறைகளை யெடுத்துக்காட்டல் எளிதாம். இத்தேசம் உன்னத நிலைபெறவிரும்புவர் இத்தேசவாசிகளாகிய நம்முடைய குற்றங்குறைபாடுகளை யுணர்ந்து அவற்றை நீக்க முயலவேண்டும்.

இந்தியர்களுக்கு வேளாண்மை புராதனத் தொழில். தொழுதூண் சுவையினும் உழுதூணினிதே என்றனர் ஔ

வையாரும். கிருஷித்தொழிலைக் கௌரவமாகக் கொண்ட போதிலும் புது வழிகளில் நிலத்தைப் பண்படுத்தி மேனி யை அதிகரிக்கச் செய்கின்றிலர். தவிரவும், நெசவு முதலிய கைத்தொழில்களும் பன்னூற்றாண்டுகளுக்கு முன்னிருந்த வாறே இருக்கின்றன. புதிய கருவிகளை வருத்தி மேற்றிசை யாருடன் போட்டி போடுபவர் கிடையா. மாரியின்குறைவால் பயிர் விளையாதொழியின் கைத்தொழில் மன்னுயிரைத் தாங்காது. பஞ்சம் மேலிடும். இது காரணத்தாலன்றோ வருஷா வருஷம் இந்தியாவில் ஒவ்வோர் பாகங்களில் பசிப் பிணியால் மாள்பவர் கோடி கோடியே.

நம்மவர்கள் ஒன்றையுந் துணிந்து முயற்சிப்பதில்லை. இதற்குக் காரணம் பல தேயங்கள் போய்ப் பாராததே. கிணற்றுத் தவளைக்கு நாட்டு வளப்பமேன் என்பதுபோ லும் பிறந்த வூரிலேயேயிருந்து பிறநாட்டுச் சமாசா ரங்களை யறிய விருப்பங் கொள்ளாது, நம்மவர்கள் தாங் களே மேலோரென்றும், அறிவிலும் ஞானத்திலும் முதிர்ந் தோர் வேறிலரென்றும், தம்மேம்பாட்டுரையிற் காலத்தை யவமாக்குகின்றனர். ஒருவரை யொருவர் நம்புவதில்லை. பெருமுயற்சிகளுக் கெல்லாம் ஐக்கியமும் ஒற்றுமை யும் விசுவாசமும் வேண்டும். ஆங்கிலக் கல்வி ஆரம்பித்து ஏறக்குறைய ஐம்பது வருடமாகின்றது. சாத்திரப் படிப்பு ஒன்று மட்டும் விருத்தி யடைகின்றதே யொழிய, கைத் தொழிற் படிப்பு, வாணிகப்படிப்பு முதலான தக்க வூதியந் தரும் படிப்புக்கள் ஏற்படவில்லை. அவை ஏற்பட்டிருக்கு மாயின், நம்நாட்டுத் தேங்காயும், தேங்காய் எண்ணெயும், சணலும், பருத்தியும், மிளகும், தோலும் இவைபோல்வன பிறவும் அயல் நாடுகளுக்குப்போய்ப் பணிசெய்யப் பெற்று நன்னிலையில் நான்கு பங்கு விலைக்கு இவ்விடத்தில் அவை

விலையாக விடமிராது. தற்காலத்தில் வாழை நார் முயற்சி எத்தனை துடுக்காய் நடந்து வருகிறதென்பதை நாமே பார்த்து வருகின்றோமன்றோ? இதனால் வெளியாவதென்னவென்றால் நமக்கு உண்மையான தேசாபிமானமில்லை என்பதே. பசு பதி பாசத்தில் நம்மவர் தந் தலையைக் கீறிக்கொண்டு நம்முடைய தேசத்தைவிட தத்துவஞான முதிர்ச்சி வேறெங்குங்கிடையாதென்ற வீண் கருவங்கொள்கின்றனரேயன்றி நம்முடைய நாட்டுச் சரக்கையே நாம் உபயோகப்படுத்த வேண்டும், அங்ஙனஞ் செய்து நம் தொழிலாளிகளை ஊக்கப்படுத்த வேண்டும், என்ற சுதேசாபிமானம் இன்னும் கிளம்பவில்லை. யந்திரங்களால் செய்யப்பட்டு வரும் சரக்குகள் விலை குறைந்தேயிருக்கும், கையாற் செய்த சாமான்கள் விலை கூடியேயிருக்கும். இதைக் கவனியாது அன்னிய நாட்டார் பொருளைக் கொள்ளைகொண்டு போவதைப் பார்க்கின்றோம். நம் நாட்டாரே அதைப் பெற்று நன்னிலை யடைய தக்கபடி முயற்சி செய்கின்றிலம். ஆங்காங்கு ஏற்பட்டிருக்கும் நூல் கடிதம் எண்ணெய் முதலான யந்திர சாலைகளும் அனேகமாய் ஐரோப்பியருக்கே சொந்தம். உலோகங்களைக் கோலாறு முதலிய விடங்களிற் சுரங்கஞ்செய்து பயனடைவோரும் ஐரோப்பியரே. முயற்சியுடையோர் இகழ்ச்சியடையார் என்பது முதுமொழியன்றோ? நம்மவர் தினசரி கூலிவேலை செய்து காலங்கழிக்கின்றனர். நம்மைக் கருவிகளாக உபயோகப்படுத்திப் பெரும்பயன் பெறுபவர் புறநாட்டாரே.

தூரதேசப்பிரயாண நிபந்தனைகளால் நம்முடைய தேசம் முன்னுக்கு வரவில்லையென்பது மலைமேற் றீபம் போன்று விளங்கும். கப்பல்யாத்திரை செய்பவர் ஜாதிப்பிரஷ்டராவர் என்ற கொடியவிதியை யமைத்தபாவிக்கு

ஏழேழு நரகமுங் காணுமோ? பன்னுடுகளேயும் பலதிறத்தாரையும் பார்த்தலினுலன்ருே நம்முடையகுறை இன்னதென்று புலப்படும், நம்முடைய வீண்கருவமு மடங்கும். அஃதன்றி கிணற்றி லடங்கிய தவளேபோன்று தன்றேசமல்லால் பிறிதொன்றில்லே என்ற வீண் எண்ணத்தை விழுங்கி விக்கிச் சாகின்ருேம். "கூவலாமை குரைகடலாமையைக் கூவலோ டொக்குமோ கடல்" என்ற வாக்கீசர் வாக்குக்கு இலக்காய் மதியிலிகளாய்த் திரிகின்ருேம். ஜாதிமதத்துர் எண்ணங்கள் நம்மை விட்டகன்ருலன்றி நாம் சிறப்புறுதல் எந்நாளு மிலதென்பது உறுதி.

நாம் முன்னிலேக்கு வரத்தக்க கல்வியை நம்மனேர் நமக்குக் கொடுக்கவில்லே. பி. ஏ., எம். ஏ. க்கள் ஏராளமாக வருஷா வருஷம் சித்திபெற்று வருகின்றனர். பலவகைத் தொழில் முயற்சிக்குரிய படிப்புப் பரவவேண்டும். நமக்கு முதன்மையாகத் தோன்றும் ஆங்கிலேயநாடும் கைத்தொழில் வாணிபத்திற் சிறிதுகாலந் துயிலுற்றபோது ஜெர்மனி, அமெரிக்காவின் ஐக்கியமாகாணங்கள் முன் வந்தன. சமீபகாலத்திற்ருன் ஆங்கிலேயர் துயிலொழிந்து கண்விழித்தனர். எம்மூலேயிலும் அமெரிக்கரும் ஜெர்மானியரும் நமக்கு முந்தினரே, அதற்குக் காரணம் யாதென்று விசாரணேசெய்யத் தொடங்கினர். புதியவை கண்டுபிடிப்பதிலும் உண்டுபண்ணுவதிலும் ஜெர்மானியரை மிஞ்சினவர் இதுகாறு மிலர். நந்தேசத்தில் விளேயுமியற்கைப் பொருள்களில் அனேகத்தை அவர்கள் கலவையாகச் செய்கின்ருர்கள். போலிவயிரக் கடுக்கன்கள் கோடிகோடியாய் இத்தேசத்திற் செலவாகின்றன. இந்தியநீலமும் அரக்கும் நந்தேசவிளேபொருள்கள். முன்னது செடியினின்றும், பின்னது ஒருவிதப் பூச்சியால் ஆல

மரத்தில் உண்டாவதென்றும் நாமறிவம். இவற்றிற்குப் பதிலாக ஜெர்மனிதேசத்திற் பலவற்றைச் சேர்த்து இவற்றினுஞ் சிறந்த கலவைநீலமு மரக்கு முண்டாக்கி யிருக்கின்றனர். அதனுல் நம்முடைய சரக்கு விலையாகிற தில்லை. ஆதலால் காலம்போகாமல் துயிலொழிந்து எழுந்து கருமத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். தவறின், எந்நாளும் நாமிழிந்தவரே யாகுவம்.

"தங்குறை தீர்வுள்ளார் தளர்ந்து பிறர்க் குறூம்
வெங்குறை தீர்க்கிற்பார் விழுமியோர்."

## மூன்ரும் இரவு.

மங்களவாரத்தன்று குறித்த நேரத்தில் சைவசிகாமணிகள் பலரும் சித்திரசபை எய்தினர். பழவூர்வாசிகள் தங்களூரில் இப்புதுமையான பிரசங்கங்கள் நிகழுவதனுல் பேரானந்தங்கொண்டு அக்கம்பக்க வூர்களிலிருந்து வருபவர்களுக் கெல்லாம் நல்வர வளித்தனர். சபையை நடத்தும் பதின்மரும் மண்டபமேடையில் வீற்றிருந்தனர். சபைத்தலைவராகிய சம்பூரணர்,

"துஞ்சும் போதுஞ் சுடர்விடு சோதியை
நெஞ்சு ணின்று நினைப்பிக்கு நீதியை
நஞ்சு கண்டத் தடக்கிய நம்பனை
வஞ்ச னேனினி நான்மறக் கிற்பனே"

என்ரேதி, "இவ்விரவில் நடைபெறவேண்டிய விஷயம், அமைப்புப்படியே மணம்' என்பதாகும். இதை நம்மருமைச்சகோதரராகிய செவ்வியென்பவர் ஜெகப்பிரியராக்கிய நாடகங்களையும் தமிழ் நூல்களையும் நன்கு கற்றுணர்ந்தவராதலால் ஆங்கிலம் தமிழ் மேதாவிகள் இவ்விஷயத்தைப் பற்றி எவ்வாறு கூறியிருக்கின்றன ரென்பதை யாமெவருமின்புறுமாறு விளக்கிக்காட்டுவர். அனைவரும் அதற்குச் செவிசாய்த்து உண்மைஞானம் பெறவிரும்புகின்றேன்" என்றனர். உடனே ஸ்ரீமான் செவ்வி யெழுந்து தலைவரை வணங்கிப் பேசத்தொடங்கினர்.

### அமைப்புப் படியே மணம்.

அருமைச் சகோதரர்களே, அன்பர்களே—இவ்விரவில் யானுளக் கருதியபொருள் 'அமைப்புப்படியே மணம்' என்பது. ஊழின் வழியே உலகநடை. அவனன்றி

யோரணுவு மசையாது. இவை முதியோர் அநுபவம். ஜெகப் பிரியராகிய ஷேக்ஸ்பியர் தாமாக்கிய நாடகமொன்றில் இதைக் கூறி யுதகரித்திருக்கின்றனர். வேனிஸ் வர்த்தகன் என்ற நாடகத்தில் போர்ஷியா பசானியோவின் மேல் காமங்கொண்டதற்குக் காரணம் ஊழ் என்பது விளங்குகின்றது. எவ்வாறெனில், இம்மாதின் தந்தை மரணத்தருவாயில் சீட்டொன்று எழுதிவைத்தனர். அதில் தங்கம், வெள்ளி, ஈயம் இவற்றால் மூன்று செப்புகள் செய்து அவற்றில் ஒன்றில் மட்டும் இவள் படத்தை வைக்கும்படிக்கும், எவன் இச்செப்பைத் தொடுகின்றானோ அவனையே இவள் வதுவை செய்யவேண்டுமென்றும் ஆக்கினை செய்தனர். தந்தை சொன்மிக்க மந்திரமில்லை யாதலின் போர்ஷியா அங்ஙனமே செய்ய வுடன்பட்டனள். தன் பேதைமனது பயந்தாலும் ஊழிற் பெருவலி யாவுளவென்று திடங்கொண்டனள். கடவுளமைப்புப்படியே கடிமணம் நடக்குமாதலின் பசானியோ தன்னை மணக்க வதிர்ஷ்டமுடையனாயின் படமுள்ள செப்பைத் தொடுவான் என்று மனவுறுதி செய்தனள். எண்ணியவாறே முடிந்தது. இருவரும் இன்பமுற்றனர்.

சந்திரமதியைப்பற்றியும் இத்தகைய கதையொன்றுளது. அவளுடைய பிதா சந்திரதயவரசன் புத்திரப்பேற்றை விரும்பிப் பெரிதுந் தவங்கிடந்தபோது சிவபெருமான் அவன் முன்றோன்றி, ‘அரச, நீ யாற்றிய தவத்துக் குளமகிழ்ந்தோம். நினக்குப் பிறவியிலேயே மங்கிலிய சூத்திரத்தோடுங் கூடிய ஒரு பெண்மகவு தோன்றும். அவள் மங்கிலியம் பிறர் கண்ணுக்குத் தோன்றாது. அதனைத் தெரிந்து வரும் உத்தமனெவனோ அவனே அவட்குரிய கொழுநனாவன். அவ்வொரு பெண்ணால் நீ பெரிதுங் கீர்த்தியடைவை,’ என்

றனர். அங்ஙனமே இலட்சுமியினுஞ் சிறந்த சந்திரவதி பிறந் தனள், வளர்ந்தனள், விவாககாலம் நெருங்கியது. அரசர னேகர் இவளைக் கலியாணஞ் செய்துகொள்ள விரும்பினர். அவர்கட்கெல்லாம் அரசர் 'முன்ன மெம்பெருமான் மொ ழிந்தவர்க் கன்றி முடிக்கிலேன் கடிமண' மென்றார். அரிச் சந்திரனொருவனுக்கே அவள் மங்கிலியசூத்திரந் தோன் றியது. வனப்பு மிகுதியால் மயங்கினனேனும் மங்கிலியந் தரித்தவளை மணத்தல் பெருந்தவறென்று எண்ணினன். சிறிய ஜாதியார் இங்ஙனம் மணஞ் செய்துகொள்வ துண்டு, அரசர் அதற்குடன்படார். எப்படி சுயம்வரம் நாட்டினீர்களென்று மகாராஜன் வினவினன்.

"பொறுத்துமுன் மங்கலம் பூண்ட பேதையை
மறுத்திரண்டாவது மண முடிப்பரோ
சிறுத்தவர் செய்தொழி றிரை வரைப்பதி
னிறுத்தினீர் நீரெனு நெடிது கூறினன்."

அதைக் கேட்டு ஆண்டுக் குழுவியிருந்த அரசர்கள் கை தட்டி அதிசயித்து மூக்கிலே விரல்வைத்தனர். அப்பொழுது சந்திரதயவரசன் அரசர்களை நோக்கி, 'அர சர்களே, இந்தப் பூமண்டலத்தை யாளுகின்ற அரிச்சந்திர மகாராஜன் எங்கள் பெண்ணின் கழுத்தில் தாலியிருக்கக் கண்டதற்கும் நீங்களனைவருங் காணுதிருந்ததற்கும் ஒரு தேவரகசியமுண்டு. அஃதாவது பரமசிவனார் கொடுத்த வரத்தினலே இவள் பிறந்த நாள்முதல் கண்ணாடி நிழலிலே இவள் மங்கிலியத்தை நாங்கள் பார்த்ததே யன்றி அது சந் திர வதியின் கைக்கு அகப்பட்டதில்லை என்று கூறினர். அவ்வாறு கூறியதும், வேறொரு பெயரையும் தன் மனத்தில் நினையாத சந்திரவதி, இந்த மாலைபோய் அரிச்

சந்திரன் மார்பிலே விழக்கடவ தென்று ஆகாயத்தில் எறிந்தனள். அது அந்த மகாராஜன் மார்பிலே கூடிப் பிரகாசித்தது.

"அண்டர் நாயகன் வரமளித்த நாளையில்
வண்டணி குழலியோ டுதித்த மங்கலங்
கண்டவர் பதியிவட் கென்ற கட்டுரை
யுண்டஃதன்றிவே றுண்டு கேட்டிரால்.

"மஞ்சனச் சடையினன் வரத்தில் வந்தநாள்
கஞ்சன நீழலிற் காண்ப தன்றியே
யஞ்சனக் கண்ணிக்கு மங்கைக் கெய்திடா
தெஞ்சலில் யாவரு மியானுங் கண்டிலேம்.

"என்றலும் வல்லிமு னெண்ணிய நாம
மொன்றல துள்ளுற வுன்னல ளாகிச்
சென்றவன் மார்பிது சேர்கென வுன்னு
மன்றலர் மாலையை வானி லெறிந்தாள்.

"வார்பயில் பூண்முலை மாலையு நெஞ்சும்
பார்பயின் மன்னவர் பற்பலர் கண்ணுந்
தார்பயில் வேலரிச் சந்திர னென்பான்
மார்பி லணைந்து மலர்ந்தன மன்னோ."

இவ்வாறு பிரசங்கம் முடிந்ததும் ஆண்டுக்குழுவிய அன்பர்கள் பலரும் போர்ஷியாவைப் பற்றியும் சந்திரவதியைப் பற்றியும் வியந்து பேசினர். செவ்வியி னினிய நூலாராய்ச்சியைப் புகழ்ந்து அவருடைய இனிய குரலால் செய்யுட்களைச் சந்தத்துடன் பாடியதைப் பெரிதாகப்பாராட்டினர். முதற்சாமங் கழிந்ததும் சபை கலைந்தது. மங்களம் பாடப்பட்டது.

## நான்காம் இரவு.

புதவாரத்தன்று அற்புதர் பிரசங்கமென்று காலையில் பறை யறைவிக்கப் பட்டிருந்தபடியால் மாலை ஆறுமணிக்கே சபாமண்டபத்திற் பன்னூறு பேர்கள் கூடி அவர் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்தனர். சரியாக ஏழுமணியடித்ததும் ஒன்பதின்மர்புடைசூழ அற்புதர் வந்துற்றனர். பலருங் கைகொட்டி ஆர்ப்பரித்தனர். ஒலியடங்கவும் அக்கிராசனாதிபதியெழுந்து அற்புதர் யாரென்றும் அவருடைய குலமாண்பு இத்தகைத்தென்றும் அவர் சிறுவயதிற்பெற்றுள்ள பேரநுபவங்களிவையென்றும் விசித்திரமாக விஸ்தரித்து, "சுற்றமுந்துணையும் மனைவாழ்க்கையும் அற்றபோ தணையாரவர்" என்று பேசிமுடித்தவுடன், அற்புதர் சபைக்கும் தலைவருக்கும் வந்தனமளித்துப் பின்வருமாறு 'வாழ்க்கைத்தொல்லைகளை'ப்பற்றிப் பிரதிக்கினைப்படி பேசுவாராயினர்.

### வாழ்க்கைத் தொல்லைகள்.

நண்பர்களே, நேற்றிரவு மணத்தைப்பற்றி என் நண்பர் செவ்வனே பேசினர். இன்றிரவு, மணம் நிகழ்ந்தபின் வரத்தக்க வாழ்க்கைத் தொல்லைகளை எடுத்துப்பிரஸ்தாபித்தல் கேட்போரனைவருக்கும் இனிமை பயக்காதென்பது என்னுடைய எண்ணம். ஆயினும் தொல்லைக ளித்தன்மையனவென்று தெரிந்து அவற்றை இயன்றவாறு விலக்குதல் நம் முதற்கடமையாம்.

நம்முடைய வாழ்நாட்களில் நமக்கு அநேகவிதத் தொல்லைகள் சம்பவிக்கின்றன. அவை பல்வகையவாயினும் அநேகத்திற்குக் காரணம் நாமே. சில சம்பவங்களை நாம் தொல்லைகளாகப் பாவிப்பதன்றி அவை யுண்மையில் அத்

திறத்தன வல்ல. இத்தகையன கணக்கில. அவற்றை உற்று நோக்கிற் கானல் நீராய் முடியும். புராணங்களில் மனச்சஞ்சலத்திற்கு மூலம் மாயையே யென்று வற்புறுத்துங் கதைகள் பலவுள. நந்தொல்லைகளிற் சில தீமைகளை விளைவிக்கின்றன; வேறு சில தீமைகள் போல் தோன்றி அழியா வின்பம் அளிக்கின்றன. இந்தப் பிரபஞ்சத் தொல்லைகள், மனத்தை வாட்டும்பொழுது, பல்லாயிர வுபாயங்கள் பரிதியின் கிரணங்கள்போன்று பாப புண்ணியம் கவனியாது மனத்தை மயங்கச்செய்கின்றன. இத்தருணங்களில் மனம் தன்னொளியை விட்டுப் புறவிருளைப் பற்றுதலினால் அதற்குத் துன்பமும், வியாகுலமுமே தவிர வேறொன்றும் விளைவதில்லை. "ஆதன்ஸ் நகரம் நல்லவாசஸ்தலம்; மனப்பாக்கியம் (அஃதாவது, காமம், வெகுளி முதலியனவற்றால் மனச்சலனமின்றி இருத்தல்) அதனினும் சிறந்தது" என்று ஒரு புலவர் கூறியிருக்கின்றனர். ஆகையால் நாம் எப்பொழுதும் கவலைகள் நம்மனத்தைக் கவற்சிக்கும்பொழுது அகமலர்ச்சி கொள்ளவேண்டும். அங்ஙனம் செய்வோமாயிற் பரதேசவாசியாயிருக்க நேரிட்டாலும் சரி, சிறைச்சாலையிலடைபட்டாலும் சரி, தரித்திர மேலிட்டாலும் சரி, தலைக்குத் தண்டனை விதிக்கப்பட்டாலும் சரி, பயபேதி நம்மைப் பீடியாமற் கூடிய மட்டும் புறச்சம்பவங்கள் மனப்பீட மணுகாது காத்தல்வேண்டும். பரிசுத்த ஆத்மாக்களுக்குக் கற்கோட்டை சிறைச்சாலையாகுமா? இருப்பளிக் கூடுகள் கூடுகளாமா? அவையெல்லாம் தவச்சாலைகளே. தடையிலாவன்பும் தளையிலா வான்மாவும் உளவேல் விண்ணிலுளார்க்கும் நம்முடைய சுயாதீனம் கிடையாது. "அறிவாளிகளுக்கு ஞாயிறு தோன்று மிடங்களெல்லாம் நல்லதுறைகளே" என்று ஜேகப்பிரியரும் சொல்லியிருக்கின்றனர். உண்மையான பாக்கியம் அகப்பாக்கியமே யொழிய புறச்செல்வ மன்று. மேற்கூறிய

நாடகவாசிரியருடைய நாடகங்களில் ஒன்றில் ஒருநடன் இப் பிரபஞ்சத்தைப் பல சிறைகளுள்ள காராக்ருகத்திற்கு உவமிக்க மற்றொருவன் "ஏன் அங்ஙனம்? உனக்கு அஃதொன்று மில்லையே. வாஸ்தவத்தில் நன்மையேது, தீமையேது? எல்லாம் மனப்பாவகமே. எனக்கு அதுவே சிறை" என்று விளம்பினன். உரோமானிய விவேகியொருவர், "எல்லாம் மதமே. ஒருவனைக் கெடுக்காத வஸ்து அவன் வாழ்வை எங்ஙனம் பாழாக்கும்? மரணமும், சீவனும், கண்ணிதையும், குறைவும், துன்பமும், இன்பமும், இவையனைத்தும் நம்மை நலப்படுத்தவும் இடர்ப்படுத்தவும் கூடாமையால் அவை நல்லோர்க்கும் தியோர்க்கும் பொதுவே" என்று சொல்லியிருக்கின்றனர். ஆங்கிலேயதேயத்து ஞானிகளிலொருவர் "கேடுகள் விளைவதும் அகத்தாலே; நன்மை பயப்பதும் அகமே. ஆதலினுல் அகத்தை யுற்றுநோக்குக" என்றனர். ஆண்டுள்ள மற்றொருவர் "விண்ணை வீழ்நரக மாக்குவதும், பாதலத்தை மீதலமாக்குவதும், மனமே யொழிய வேறில்லை," என்றனர். ஏனெனில் அவர் அந்தகரானபொழுது அநேக வற்புதக்காட்சிகளைக்கண்டனர். அது போலவே ஜெர்மானியத்திருந்த சங்கீத வித்வான்களிற் சிரோஷ்டர் ஒருவர் தமக்குச் செவிகேளாத காலத்தில் நரருக்குக் கிட்டாத தேவகீதங்களைக் கேட்டனர் என்று மொழிந்தனர். அடுத்த விநாடியில் இன்ன நேரிடுமென்று தெரியாத நமக்குக் கேட்டைக்கண்டு அச்சப்படுதல் இயல்பு. ஏதேனும் ஓர் அபாயம் இத்தன்மையதுதான் என்று நாம் நன்கு அறியின் அவ்வபாயத்திற் பாதி கழிந்ததாகவே கொள்ளல் வேண்டும். அத்தகைய முற்றுணர் வின்மையாலே, பல கியாயங்கள் தோன்றினும் விவேக விரோதமாய்ச் சோரரைவிடப் பேயென்றால் மிகவும் அஞ்சுகின்றோம். வாஸ்தவத்திற் பேய்கள் இருந்தாலுங்கூட, அவை எப்படி நமக்குத் தீங்கு விளைக்கக்

கூடும்? பேய்க்கதைகளிலுங்கூட, அநேகர் பேயைக்கண்டதாக மட்டும் சொல்லப்பட் டிருக்கின்றதே யொழிய ஒருவராயினும் அஃது உளதென்று உணர்ந்ததாகக் காணப்படவில்லை. மேற்கூறிய ஆங்கிலதேயத்து அந்தகக் கவிஞர் மரணத்தைப்பற்றிய வருணிப்பில் "மற்றொரு சொரூபம்,—அதற்குச் சொரூப முளதென்றாற் கை, கால், பொருத்து என்று பிரித்தறியக்கூடிய சொரூபம் கிடையாது. அதுவன்றியும், அது வஸ்துவோ வென்று ஆசங்கித்தலும் கூடும். இது வென்றும் அது வென்றும் பகுத்தறிதல் இயலாது. அஃது இரவைப்போன்று இருண்டும் பத்து மூர்க்க தேவதைகளைப் போன்று கொடூர நோக்குடைத்தாயும், நரகத்தைப்போன்று பயமுறுத்தத் தக்கதாயும் இருந்தது. தவிரவும், அஃது அஸ்திரமொன்றை விடுத்தது மன்றி அதன் சிரம்போல் தோன்றிய பாகத்தில் ஒருவிதக் கிரீடமும் தரித்திருந்தது" என்று கூறியிருக்கின்றனர். இரவு இருட்டும் பயத்தை விருத்தி செய்யும் என்று பின்வருமாறு ஒருவேதப்புத்தகத்தில் கூறப்பட்டிருக்கின்றது. "நள்ளிரவில் மாந்தர் அயர்ந்த நித்திரையிலிருக்கும்பொழுது, எனக்குத் தரிசனங்கள் கிடைத்த பின்னர், ஒருவித பயமேலிட்டு என் உடல் நடுங்கிற்று. அதன்பின் என்முன்னே ஒரு தோற்ற முண்டாயது. அதைக் கண்டவுடன் என் தேகத்திலுள்ள மயிரெல்லாம் சிலிர்த்தன. அத்தோற்றமோ அசையவில்லை. அதன் சொரூபத்தை நான் பார்க்கவும் கூடவில்லை. என் நயனங்களிற் பாவையொன்று தோன்றி, அசைவற்று இருந்தது. பின்னர்க் 'கடவுளைப்பார்க்கிலும், அதிக நீதி செலுத்தும் நானும் உளனோ' என்று வினவியதையும் கேட்டேன். இதனால் நாம் அறிவன யாவை? பயமுறுத்துவனவெல்லாம் கெடுதி யுண்டாக்குவன வல்ல; நன்மை பயப்பனவுமுள வென்பதே.

எது விஷயத்திலும் முதற் கோணல் முற்றிலும் கோணல். ஆரம்பத்திற் பீதியுண்டானல் முடிவிலும் அப் பீதி விருத்தியாயே வரும்; இல்லை யென்றல் இல்லை. அநேக விஷயங்கள் அபாயங்கள் போலத் தோன்றி மாந்தர்களை ஏமாற்றுகின்றன. அத்தருணங்களில் 'அபாயத்தை எங்கே, வரட்டும், பார்ப்போம்' என்று மனந்துணியாமல் எங்கே வந்து நம்மை அமுக்கிவிடுமோ என்றுபயங்கொண்டு தூங்காமற் கண்விழித்துக்கொண்டிருத்தல் தகுதியன்று. ஏனென்றல் விழித்தகண் மூடுமல்லவோ? பின் வருவனவற்றை முன் யோசித்தல் அறிவினர் இயல்பு. பின்வருந் துயரத்தைப்பற்றி முன்னரே நினைத்து நினைத்து வாதனைப்படல் மூடத்தனம். இருட்டறைகளைவிடக் காற்றுலாவும் மாடமாளிகைகள் சிறந்தனவே.

நாம் சிலவமயங்களில், மனப்பூர்ணமாயோ அன்றியோ நன்னெறி விட்டேகின் அவ்வழித் திரும்புவது அசாத்தியமன்று. மட்டுக்கு மிஞ்சிய நெட்டுயிர்ப்பாலும் மிதமிஞ்சியிடுமுத்தத்தாலும் ஆவிமேகமும் அழுகைமாரியும் வரிற் பின்னர் வாழ்க்கை முன்போல் ஒருகாலும் இராது என்பது துயர்விளைக்கும் கொள்கை.

ஆயிரவருடத்திற்கு முன்னிருந்த ஒருவேதாந்தியின் வாக்குகளில் இரண்டை இவணெடுத்துக் கூறுவாம். அவை யாவன: தீமையைப் பொறுத்தலினும் தீமை இழைத்தலைத் தடுப்பதே சிலாக்கியம். ஒருவன் தீமைசெய்து விடின் அவன் தண்டனைக்குட்படாது திரிவதைவிடத் தண்டனைக் குட்படுதலே நலம்.

சுயநயங் கருதுதல் பொதுஜன பாக்கியத்துடன் முரணுகிறதென்றும் ஆதலினல் அது குற்றமென்றும்

நாம் சொல்லுவது வழக்கம். ஆனால் அது முற்றிலும் சரியன்று. அதில் நாம் விசனிக்கக் கூடிய பாக மென்னையோ வெனில், அநேகர் சுயநயங் கருதுவதில் மதியை யிழந்து விடுவதுமன்றி, அம்மதியிழப்பால் தங்களுக்காயினும் பிறருக்காயினும் சுகலாபந் தேடுவதில்லை.

"ஒவ்வொருவனும் முதல் முதலில் தன்னைப் பேண வேண்டும்; தன் சுகத்தையும் தேடவேண்டும். அவன் அவ்வாறு செய்தலினால் உலகத்தாருக்கும் அந்தியில் நன்மை விளைவிப்பானென்பதிற் சிறிதும் ஐயமில்லை" என்ற ஒருவர் கூற்றை நாம் முற்றிலுமே எடுத்துக்கொள்ளாவிடினும் அதிற் சிறிது உண்மை இருப்பது திண்ணம். மேற்கூறியது பொதுவசனம். அதற்கு அநேக விலக்குகள் தென்படும். ஆனால் ஒவ்வொரு மனிதனும் மிகுதி நீக்கித் தன் சுகத்தைப் பாராட்டுவானானாலும், தான் தேக வலியும் முகமலர்ச்சியு முடையவனாக ஆக்கிக் கொள்வானானாலும், தான் இல்லத்தைச் செவ்வைப் படுத்திக் குடும்பத்திற் சகசமாய் நேரிடும் அற்பக் கலகங்களுக்கும் மனவருத்தங்களுக்கும் தான் மூலகாரண னல்லனெனச் செய்வானானாலும், தான் காரியாதிகளை நடத்திக்கொண்டு குடிவெறியில்லாது சாந்தமும் அமைதியும் கடனிறுக்குந் திராணியும் பொருந்தினவனானாலும், சீனதேசத்தில் வழங்கும் முதுமொழி கூறுகின்றபடி தன்னுடைய கதவண்டையிலுள்ள பனிக்கட்டிகளை ஒதுக்கிவிட்டு அயலான் வீட்டு ஓடுகளில் உறைந்துள்ள பனியைக் கவனியாதவனானாலும், அவன் ஒழுக்கம் மிகச்சிறந்ததென்று சொல்லமுடியாதாயினும், அவ்வொழுக்கத்தால் அவன் எவ்வாறு தன் குடும்பத்திற்கும், பந்துஜனத்திற்கும் இஷ்டர்களுக்கும், நன்மைசெய்கின்றான் என்பது சொல்லாமலே வெளியாகும். ஆனால் ஜனசமூகத்தை உற்று நோக்குமெவர்க்கும் உலகத்தில் தமக்கு நன்மைஇதுவென்று

தெரிந்தவரும், தெரிந்து நன்மை கடைப்பிடிப்பவரும் வெகு சிலர் என்பது தெரிந்த விஷயமே. தீமை செய்வதனுல் உலகமாந்தர்கள் தங்களுடைய பாக்கியமாகிய செல்வத்தை விருத்தி செய்கின்றிலர் என்பதைத் தங்களுடைய சொந்த அநுபவத்திற் கண்டு கொள்வார்களாஞல் மிகவும் நன்மையாயிருக்கும். இவ்விஷயத்தின் உண்மை சிறுர்களைக்கவனித்தால் தெரியவரும். கெட்ட நடத்தையுள்ள பிள்ளைகளுக்குச் சுகம் கிடையாது. கெட்டுவரும்பிள்ளைகளை முதலிலே தண்டித்துவிட்டாற் பின் வயது செல்லச்செல்ல அவர்கள் அதிகத் துன்பமடைய மாட்டார்கள்.

ஒவ்வொரு மனிதனிடத்திலும் தன்னைப் பரிபாலிக்கும் தேவதூதனுளன் என்ற கருத்துச் சிறந்தது. ஏனெனில் மனச்சாட்சியென்னும் கரணம் கண்துயிலாமல் அபாயம் வருமுன்னரே அபாயத்தைப்பற்றி எச்சரிப்புச் செய்கின்றது.

எப்பொழுதும் நம்முடைய குறைவுகளைப் பிதற்றுவதே நமக்கு வழக்கம்; ஆனுல் அங்ஙனம் செய்தல் செய்ந்நன்றி கோறலேயாம். எப்படியெனில், எவ்வளவு துன்பம் நேரிட்டாலும், இந்தச் சீவான்மாவையாவது ஜெகமெங்கும் சுற்றித்திரியும் எண்ணங்களையாவது நினையாமலிருந்து அழிய விடுவோமென்ருல் எவனுவது சகிப்பானு? ஆனுல் இவ்வுலக வாழ்க்கையானது நம்மைப் பரலோக வாழ்க்கைக்கு யத்தனப்படுத்துகிறதென்று சிலர் சொல்லலாம். நல்லது, அஃதுண்மையாயின், பதவிக்குச் செம்மைப்படுத்தும் இப்பௌதிக வாழ்க்கையை ஏன் குறைவாகப்பேச வேண்டும்? “நமக்கு நேரும் துன்பம் சிறிதாயினும் பெரிதாயினும் கடவுளால் அஃது அனுப்பப்பட்ட தூதனென்று வந்தனைசெய்து அத்தூதன் நம் வாசல் நடைவிட்டுக் கட

க்குமுன் கால் கழுவி முகமலர்ச்சியோடு விருந்து படைத்து மானுட வாழ்க்கைக்குரிய சலனமொன்றும் தேவ மனத்தை வருத்தாது உபசரணை செய்யவேண்டும். அங்ஙனம் செய்வோமானால் துக்கமும் சுகம்போற் சிறந்து விளங்கும்; மனத்தின் மாசைக் கழுவும்; மலத்தை நீக்கிப் பலப்படுத்தும்; சிறிய தொல்லைகளைத் தொலைக்கும்; சிறந்த புத்திமதிகளை யளிக்கும்; நீடூழி வாழ்வைக் கொடுக்கும்'. சிலமனிதர்கள் அடியில் நீரும் மேலே பாசியுமாயுள்ள தடாகங்களைப் போல்வர். அத்தடாகங்களிலுள்ள நீரை அருந்தவேண்டுபவர் மேற்படர்ந்திருக்கும் பாசியைக் களைந்துவிட்டு நீரைக் கொள்வதுபோல அவர்களுடைய மனத்தின்கட் படர்ந்திருக்கும் நானாவிதப் பாசத்தைக் கலக்கினாலன்றி அடியிற் றங்கியிருக்கும் நற்குணங்கள் வெளியாகா.

நம்முடைய மனத்துக்குத் திருப்தி உண்டாக வேண்டுமானால், எவ்வாறு பிணியாளர்கள் சுகத்தை நாடுகின்றார்களென்பதையும், போரிலமர்ந்திருப்பவர்கள் சமாதானத்தை விரும்புகின்றார்களென்பதையும், பெரிய நகரத்திலுள்ள புறத்தேச வாசிகளும் பகிரங்கத்திற்கு வராதவர்களும் கீர்த்தியையும் சிநேகர்களையும் தேடுகின்றார்களென்பதையும், இவ்வளவும் கிடைத்த ஒருவன் அவற்றை இழக்கநேரிட்டால் எவ்வாறு மனத்துயரப்படுவானென்பதையும் சற்றுக் கவனிப்போமானால், சுகங்களனுபவிக்கும்பொழுது அவற்றைச் சிறிதாயும், அவையொழிவதால் விசனம் பெரிதாயும் கொள்ளமாட்டோம்; அல்லது, நம்முடைய வீட்டையும் நம்முடைய நிலைமையையும் சிந்தித்தால் நமக்கு மனத்திருப்தியுண்டாகும். அதுவும் தவறின், நம்மிலும் மேலானவர்களுடன் நம்மை ஒப்பிடாமல் நம்மிலும் எவ்வளவோ கேவல நிலையிலிருப்பவர்களைப் பார்த்து நாம் சந்தோஷப்படவேண்டும். "தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை

யம்மா பெரிதென் றகமகிழ்க" என்றார் பெரியோரும். யாரா வது ஒருவர் பல்லக்கிலேறிப் போவதை நாம் பார்த்தால் அவர்களைக்கண்டு அசூயை கொள்ளலாகாது; நம்முடைய ஸ்திதி அச்சிவிகைதூக்கிகளுடைய நிலைமையினும் மேம் பாடுடையதா வென்று கவனிக்கவேண்டும். இவ்வாறு நாம் செய்வோமாயின் நமக்கு எப்பொழுதும் இன்பமே யொழி யத் துன்பமில்லை; தற்கால இழிவு நிலைமையை யுத்தேசித் துத் துன்பப்படமாட்டோம்; சென்றனவற்றை வந்தனத் துடன் நினைப்போம்; வருவனவற்றைப்பற்றிப் பயமாயி னும் சந்தேகமாயினும் கொள்ளாமல் அவற்றை உறுதி யாயும் மனமகிழ்ச்சியுடனும் எதிர் கொள்வோம்.

"தந்தை தாயொடு தாரமெனுந் தளைப்
பந்த மாங்கறுத்துப் பயில் வெய்திய
கொந்த வீழ்பொழிற் கொண்டைச் சுரவனைச்
சிந்தை செய்மி னவனடி சேரவே"

## ஐந்தாம் இரவு.

இன்று வியாழனுக் குகந்த தினம், வியாழபகவான் கல்விக்குரியவன். உலகில் 'முயற்சியுடையார் இகழ்ச்சியடையார், முயற்சி திருவினையாக்கும்' என்ற முதுமொழிகளை யறியாதா ரெவருளர். மானிடப்பிறப்பே துன்பமாயின் மானிட ஜீவியகாலத்தில் தொல்லைகள் வந்துறுவா? வந்தடையுந் துன்பங்களைச் சகித்து உள்ளதில் திருப்தி யடைபவர் சிலரினுஞ்சிலராம். மதிதோறும் மதிமறைந்து பிறங்குமாறு துன்பங்களையொழித்து விருத்தி நம்பிக்கையிற் பற்று ற்றுப் பாடுபடுபவர் பீடுபெறுவர் என்பதற் கையமுளதோ. இவ்வருமையான விஷயத்தைப்பற்றி சற்குருவின் பிரசங்கம் நிகழுமென்று சபைத்தலைவர் குழுவியிருந்த பழவூர்வாசிகட்கும் பிறதேச நண்பர்கட்கும் அறிவித்தனர். சற்குருவைக்காண விரும்பாதார் யார்? அவர் வந்து தோன்றவும் அவர் வாய் திறந்து பேசுமுன் அனைவரும் அவரை நமஸ்கரித்தனர். அவரும் 'சுபமஸ்து' என்றோதி எடுத்தாளக்கருதிய விஷயத்தைப்பற்றிச் சொல்லத்தொடங்கினர். கரகோஷம் மிகுந்து விளங்கியது.

### விருத்தி நம்பிக்கை.

உழுவலர்களே, பெரியோர்கள் இளஞரைக்காணின் விருத்தியடைமின், மென்மேலும் பெருகவுண்டாவதாக, வென்று வாழ்த்துதலைப் பன்முறை கேட்டுவருகின்றோமன்றோ. மலர்தலையுலகில் பழவினையின்பயனாகப் பலர்படுந் துன்பங்களைப்பற்றிச் சாங்கோபாங்கமாகப் பேசினதை நீங்கள் கேட்டிருக்கின்றீர்கள். புதுவினைசெய்து பெரும்பதவியெய்திய பூமான்களின்சரிதையை வாசித்திருக்கின்றீர்கள். தாளாது வினைசெய்வார் ஊழையும் உப்பக்கங்காண்பர் என்பது மாதானுபங்கியின் பொய்யா வாக்கன்றோ. இதுநிற்க.

உலகம் மேன்மேலும் விருத்தியடையுமென்று நாம் நம்ப விடமுண்டு. இயற்கையமைப்புப் பொருள்களின் குணுகுணங்கள், நம்மைச் சுற்றியுள்ள தோற்றங்கள், இவற்றைப் பற்றி அறிவு நமக்கு விருத்தியாதலினல் நம்முடைய சந்ததியார் நம்மைவிட அதிகப் பயனடைகின்றனர், பயனடைவர் என்பது உறுதி. கல்வியபிவிருத்தியும் சாத்திரம், தொழில், சங்கீதம், கவி, மதம், இவற்றின் விருத்தியும் மனிதனைக் கௌரவப்படுத்துகின்றன. இவற்ருல் தன்னுருகை, தன் லாபம் இவையென்றறிந்து அநுபவிக்கின்ருன். 'வெளிச்சமுள்ள விடமெங்கும் குதுகலமே' என்ருேர் முதுமொழி இற்ருலியா தேசத்தில் வழங்கிவருகின்றது.

உலகவிருத்தி குன்றியிருப்பதன் காரணத்தை யாராயப் புகுகின்ற நாம் கடவுள் சிருஷ்டியைச் செம்மைப்படுத்த முயலுதல் நன்றியின்மை, பத்தியின்மையின் அறிகுறி என்ற வீணன அபிப்பிராயமே அதுவென்று காணுவோம். மனிதருக்கு நெருப்பினுபயோகத்தைக் காட்டியதனிமித்தம் புரோமீதியஸ் என்ற முன்னுலோசனைக்காரன் கடவுளின் கோபத்திற்காளாயினன் என்ற புராதன கதையுளது. இவ்விதமாகவே ஒன்றைப் புதிதாய்க் கண்டுபிடிப்பவருக்கெல்லாம் தெய்வதண்டனை கிடைக்கும் என்ற பயம் பரவியிருக்கின்றது. இவ்வபராதத்தை நீக்கும்பொருட்டே முன்னேர் புதுமை ஒவ்வொன்றுந் தெய்வகடாக்ஷத்தாலுண்டாயிற்று என்றனர். குளோரபாரம் என்ற ஸ்மரணை நீக்கியை யுபயோகப் படுத்தக் கூடாதென்று வாதித்தவர்கள் கருமத்துக்குத் தக்க வருத்தமனுபவிக்க வேண்டிக் கடவுள் செய்த ஏற்பாட்டை நாம் தவிர்ப்பதாகும் என்றனர்.

முன்காலத்தில் ஹம்பர் வடமாகாணத்திற்கு மதப்பிரசங்கி யொருவர் வந்தனர். அப்பொழுது மாகாணவதிபதி

ஆண்டுள்ள கனதனவான்களையும் பட்டமார்களையும் கூட்டிவைத்து அவர்களுடைய அபிப்பிராயங் கேட்டனர். அத்தருணம் வயோதிகத் தலைவன் ஒருவன் எழுந்து பின் வருமாறு பிரசங்கித்தனன். "அரசே, நீர் இரவில் நம் முடைய குழாம் புடைசூழ மண்டபத்தில் வீற்றிருந்து விருந் துண்ணும் வேளையில், இரவு இருண்டு பயங்கரமாயும், மண்டபத்தி னுட்புறமெல்லாம் வத்திவெளிச்சம் நிறைந்தும் உள்ள தருவாயில் தூக்கணமொன்று இருள் மூடின வெளிப் புறமிருந்து மண்டபத்துட் சென்று மறுபடியும் இருளிற் பறப்பதைப் பார்த்திருக்கின்றீர். அது சிறிது நேரம் தங்கிப் பின்னர் போகுமிடத்தையாயினும் அது புறப்பட்டு வந்த விடத்தையாயினும் நீர் அறிந்திலீர். மனிதத்தோற்றமும் அந்நனமே. உற்பத்தியிடமும் போக்கிடமும் அறிந்தவ ரிலர். இவ்விரண்டையும் விளக்குவராயின் இப்புதிய பாதிரி சொல்லுவதைக் கேட்கலாம்."

தற்காலத்தில் அநேக வாச்சரியமான விஷயங்கள் நவ நவமாய்க் கண்டுபிடிக்கப்பட் டிருக்கின்றன. ஆயினும் சில என்றும் முடிவுபெறா தனவாம். அஸ்தமனத்தில் சூரியன் வருமோவென்று மங்கோபார்க்கு என்ற யாத்திரிகன் அரே பியரைப் பார்த்துக் கேட்டபொழுது, அவர்கள் இத்தகைய வினாக்களுக்கு விடையளித்தல் மனிதவிசாரணையி லடங் காததால் அவற்றைக் கேட்டல் மதியன்று என்றனர்.

அறுபது வருடங்கட்கு முன்னிருந்த பிரஞ்சுதத் துவசாத்திரியாகிய காம்ட் என்பவர் நட்சத்திர மண்ட லங்களைப்பற்றிய வோருண்மை யுரைத்தனர். "விண்மீன் களின் தோற்றங்களையும் தூரங்களையும் ஓட்டங்களையும் பருமனையும் திட்டமாய் அறியலாம். ஆனால் அவற்றின் கட்டுமானத்தைப் பற்றியாவது எவைசேர்ந்து இவை உண்

டாயின வென்பதையாவது எவ்விதத்திலும் அறிதலிய லாது." இங்ஙனஞ் சொல்லிச் சிலவருடங் கழியுமுன்னரே இவையனைத்தும் அறியப்பட்டபடியால் சாஸ்திர விஷயத் தில் இது அறியக்கூடாதென்று சொல்லுதல் பெரும்பிழை யாம்.

நாமறியாத வுண்மைச் சமுத்திரம் நம்முன்னு மருகி லுமுளது என்றனர் நியூட்டன்ஞானியார். 19ம் நூற்றாண் டின் துவக்கத்தில் ஹம்பிரி டேவி என்பவர் நகைவாயு என் பதைக் கண்டுபிடித்தனர். அதனால் வலியில்லாமல பல்லைப் பிடுங்கினர். ஆயினும் அதைப் பிரபலமாய் உபயோகத்திற் குக் கொண்டு வரவில்லை. அச்சுவார்த்தல் 15ம் நூற்றாண்டி லே கண்டுபிடிக்கப்பட்டது. அதற்குமுன்னர் உரோமானி யர் முத்திரையுபயோகித்தனர். அஸ்ஸிரிய ஞாபகச்சிலைக ல்ளி அரசர்களின் பெயர்கள் வெட்டப்பட்டுள்ளன. ஆயி னும் ஒவ்வொரு எழுத்திற்கும் ஒவ்வொரு அச்சு வார்க்கப் பட்டதே புதுமை.

'நிற்க விடங்கொடுப்பின் உலகத்தையே அசைப்பேன்' என்று ஆர்க்கிமீடிஸ் கூறினர். ஒருண்மை வெளிப்படின் மற்றொன்றும் வெளியாகும். அணுக்களினின்று பொருள் களுண்டாவதும் புலன்கள் ஏற்படுவதும் விசித்திரமே. ஒரு வாறு இவற்றையும் அறிந்துளர் சிலரெனலாம்.

சில ஜீவஜெந்துக்கள் மனிதர் கண்களுக்குங் காதுகளு க்கு மெட்டாதனவற்றைக் காண்கின்றன, கேட்கின்றன. கருவிகளால் தூரத்திலுள்ள பொருள்களை யறிகிறோம். நுண்ணிய பொருள்களை யறிவதுவு மங்ஙனமே. பொருள்கள் நம்முடைய புலன்களுக்குத் தோன்றுவனபோன்றே இதர ஜெந்துக்களுக்கும் தோன்றுமென்பதற்கிடமில்லை. எறும்பு

தேனீ இவற்றி னியற்கை யூகத்தையும் மற்றும் நடைகளை யுஞ் சிந்தித்தே அவற்றைப் பாவலர்கள் தங்கள் பாக்களிற் சிறப்பித்துள்ளார்.

முன்னோரைக் காட்டிலும் தற்காலத்தில் அநேக விஷயங்களில் சிறப்புற்றிருக்கிறோ மென்பதை யாவரும் ஒத்துக் கொள்ளுவர். ஆனால் விருத்திக்கு எல்கை கட்டுதல் இயலாது.

நாகரீக விஷயத்திலும் தற்காலத்தார் சிறந் திருக்கின்றனர். ஆடையுடை ஊண் வீட்டுவசதி இவற்றில் முன்னோருக்கிருந்த வெண்ணங்கள் முற்றிலும் மாறிவிட்டன. கரடுமுரடான துணியும் பருத்திக்கொட்டை போன்றவுணவும் கோழிக்கூடு போன்று காற்றும் வெளிச்சமு மில்லாத வீடுமே புராதன காலங்களி லுள்ளன. அரண்மனைகள் தவிர மற்றிடங்களெல்லாம் அசுத்தாபாசம் நிறைந்திருந்தன.

தற்கால நாகரீக நடையுடை பாவனைகளெல்லாம் பற்பல ஜாதியார்களுடன் ஊடாடுவதனாலும் அவர்களுடைய வழக்கங்களை அநுசரிப்பதனாலும் அவரவர்களில் சிறந்த கவிஞர்களின் இரத்தினங்களைச் சோதித்தலாலும் விருத்தியாய் வந்திருக்கின்றன வென்பது திண்ணம்.

சில வருடங்களில் உடம்பின் வளர்ச்சி முடிந்து விடுகிறது. பின்னர் அது வளருவதில்லை. மனமோ அங்ஙனமன்று. நாளாவட்டத்தில் அதுவளர்ந்துகொண்டே இருக்கின்றது. முதியஞான மென்று பெயரிருந்தாலும் ஞானவிருத்திக் களவில்லை.

மறுபிறப்பில் நமக்கு நம்பிக்கையுண்டு. அஃதிருப்பினுமில்லாவிடினும், அக்கொள்கை நல்லொழுக்கத்திற்கு மூல

மாயிருக்கின்றது. இப்பிறப்பொழிய வேறு பிறப்பில்லையெனின், ஈவு இரக்கம் தயாள முடையவர்கள் வாதனைப் படுவதைப் பார்க்கும் நாம் துற்கருமமே செய்யப்புகுந்து தீவினையைப் பெருக்கி வருவோமென்பதற்கும் ஐயமுளதோ? கஷ்டப் படுபவனு மறுபிறப்பில் சுகமடையவாமென்று மனத்தைத் தேற்றிக் கொள்கின்ருன். பிள்ளைகளைப் பெற்ற வன்னையும் புத்திரரே பாக்கியமென்றும் புத்திரர்களால் பாக்கிய முண்டாமென்றும், வயோதிகத்தில் தமக்காந்துணை அவரேயென்றும் எண்ணுகின்றனரன்ருே!

ஒரு தேசம் முன்னுக்கு வரவேண்டுமானல் சிலர் மட்டும் யூகிகளாய் வேலை செய்தல் போதாது. அநேகர் தத்தம் வேலைகளைச் செய்து சிறப்புற்ருல் நாட்டின் கீர்த்தியும் பெருகும். ஜப்பான் தேசம் எவ்வளவு சொற்பகாலத்தில் நாகரிகம் பெற்று உன்னத நிலைக்கு வந்துவிட்டதென்பதை யாமறியோமோ?

பூலோகம் வாழ்தலையே ஒவ்வொருவனுந் தனக்காணையாகக் கொண்டு வருடமெல்லாம் பூலோக வைக்கியத்தையே நாடும் நாள் எந்நாளோ?

நம்முடைய ஆயுளைப்பற்றி நாமொன்று மறியோம். நாமிருக்கு முலகம் ஓரணுப்போன்றது. நம்முடைய வாழ்நாளோ கண்ணிமைப் பளவாம். ஆதியுமந்தமும் அறிகிலம். கல்வி விருத்தி எய்தலின் அஞ்ஞானமாகிய வந்தகாரப்போர்வை நீங்கிவிடுமன்ருே?

எது நசிப்பினும் எண்ணம் நசியாது; அதைத் தீயுமெரிக்காது, நீரு மவிக்காது. நாளுக்கு நாள் விருத்தியேயடையும். கடவுள் கருத்தைக் கணக்கிடுவார் யார் ?

"நெடோ ளிருந்த பேரும் நிலையாகவே யினுங் காயகற்பந்
தேடிநெஞ்சு புண்ணுவரெல்லாம்."

## ஆரும் இரவு.

சற்குருவின் வாக்கியங்களைக் கேட்ட சபையார் சபையின் நன்னோக்கங்களைப் புகழ்ந்து பாராட்டினர். ஆண்டுதோறும் இத்தகைய பிரசங்கங்கள் நடைபெறவேண்டுமென்று எல்லாம்வல்ல இறைவனுக்கு விண்ணப்பித்தனர். சற்குருவின் பிரதாபம் பல்கியது. சுக்கிரன் "மகாவலியுடையனென்பதும் சுக்கிர திசையில் வாழ்வுண்டென்பதும் சோதிட நிபுணர்கள் கூற்றுக்களாம். இன்றிரவின் பிரசங்கியார் சுக்கிரனே. ஆதலால் அவர் பல்பிணிச்சிறுவயதுடைய மக்களனைவருக்கும் வறுமை வேதனையை நீக்கி வாழ்வைத்தரத் தக்கவாறு பிரசங்கஞ்செய்வரென்பது திண்ணம். அறிக்கைப் பத்திரத்திற் கண்டவாறு நம்முடைய கண்டவாசிகளாயும், சென்றவொருதலைமுறையில் பலதுறைகளிலும் முன்னுக்கு வந்தவர்களாகியுமுள்ள ஜேப்பானியரைப்பற்றி சுக்கிரன் பிரஸ்தாபிக்கப்போவதால் திருஷ்டாந்தவாயிலாய் நாமும் க்ஷேமமடையலாமென்று காட்டுவார்போலும். நம்பினோர் கைவிடார், கைவிடப்படார். ஆதலின் காதுகொடுத்துக் கேட்பீர்களாக" என்று சபையோரைத் தலைவர் வேண்டினர். சுக்கிரன் முன்வந்து தான் வரைந்து கொணர்ந்த வியாசத்தைச் சபையார் காதிற்படுமாறு உரத்து வாசிக்கலாயினர்.

### ஜேப்பானியர்.

நண்பர்களே, ஜெப்பானிராச்சியம் நான்கு பெரியதீவுகளும் இரண்டாயிரத்துக்குமேற்பட்ட சிறுதீவுகளும் கொண்டது. இதன் விஸ்தீரணமுஞ் சனத்தொகையும் இங்கிலாந்து, ஸ்காத்லாந்து என்பவை சேர்ந்த ஐக்கிய விராச்யத்தினளவேயாம். ஜெப்பான் மலைப்பிரதேசம். நூற்றிற்குப் பன்னி

ரண்டு பங்குநிலங்கூடப் பயிராவதில்லை. நாடு அதிக வளப்பம் பொருந்தியிருந்தால் ஜெப்பானியர் சிறுபண்ணைகள் பல உண்டாக்கிப் பயிரிடத்தக்க சிறு நிலத்தையும் நன்கு உழுது தக்க ஆதியம் பெறச்செய்வர்.

பூமியதிர்ச்சி ஜெப்பானில் அடிக்கடி யுண்டாகும். இதனால் கேடுகள் பல சம்பவித்துள்ளன. கிராமங்களும் பட்டணங்களும் மலைகளும் திடீரென்று மறைந்துவிடும். சராசரி வருஷத்தில் ஒவ்வொரு நாளிலும் பூமியதிர்ச்சி யுண்டென்றே சொல்லலாம்.

ஜெப்பான் தேசமெங்கும் அழகான நிலத்தோற்றங்களும் இன்பந்தரத்தக்க இயற்கை வனப்புப் பொருள்களும் அமைந்துள. சுவிட்ஸர்லந்து தேசத்திற்கொப்பான மலைக்காட்சிகளும், வானம் மலை இவற்றின் சாயல்களைக் கலந்து காட்டும் ஸ்படிகம்போன்ற அமைதியான ஏரிகளும், பழங்களுந் தானியங்களும் நிறைந்த செழிப்பான பள்ளத்தாக்குகளும் பொருந்தியிருப்பதனால் இந்நாட்டின் அழகு இத்தன்மைத்தென்று சொல்லவும் வேண்டுமோ? இதனினும் கண்ணுக்கின்பங் கொடுக்கு நாடு வேறிலது. இதன் வடபாகத்திலெல்லாங் குளிரும், தென்பாகத்தில் எந்நாளுங் கோடையும், இடையிட்ட பாகத்தில் சாந்தோஷ்ணஸ்திதியும் உள.

1886-ம் ௵ உண்டாகிய குழப்பத்தின் பின்னரே அரசர் சக்கரவர்த்திப் பட்டம் பெற்றனர். நாட்டில் சீர்திருத்தங்கள் செய்யப்பட்டன. மேல்நாட்டு நாகரிகங்களும் கைத்தொழிற் சாலைகளும் உண்டாயின. வர்த்தகம் பெருகியது. நாடு செழிக்க வாரம்பித்தது.

1889-ம் ஸூ இராச்சியப் பிரமாணம் பயிரங்கப்படுத்தப்பட்டது. ஆளுகை விஷயத்தில் சனங்களுக்கும் பேசவதிகாரங்கிடைத்தது. ஜெப்பான் தேசமும் சட்டதிட்டங்கட் குட்பட்ட அரசனுளுகை பெற்றது. அன்றியும், மாகாணச் சுயவாளுகையும் ஏற்பட்டது. அடுத்தவாண்டில் ஆலோசனைச் சங்கமொன்று புதிதாகத் தொடங்கிற்று.

1895-ம் வருஷத்தில் சீனுதேசத்துடன் நடந்த போராற்முன் ஜெப்பான் விருத்தி உலகத்திற்குப் பயிரங்கமாயது. இதில் ஆச்சரியப்படத்தக்க விதத்தில் இந்நாடு செயம் பெற்றபடியால் இந்நாட்டாருக்குக் கர்வமும் இறுமாப்பும் மட்டுக்குமிஞ்சி யுண்டாகுமென்று சிலர் பயந்தனர். ஆனல் அங்ஙனம் நேரிடவில்லை. இவர்கள் முதலிலிருந்தே போரில் வெற்றியை எதிர்பார்த்தனராதலின் இவர்கட்கு வெற்றி கிடைத்த காலத்தில் சந்தோஷாவேச முண்டாகவில்லை. இவர்கள் போர்முடிந்தபின் வழக்கம்போல் தத்தங்காரியங்களைப் பார்த்தனர்.

உடற்கூறுவிஷயத்தில் ஜெப்பானியர் மேனுட்டாருக்குத் தாழ்ந்தவர்களே. ஐரோப்பியரைப் பார்க்கிலும் குளளர்கள், கனத்திலுங் குறைந்தவர்கள். உடம்பின் மேற்பாகத்தில்மட்டும் அன்னர் போன்று சிறந்தவர்கள். தலைமுறை தலைமுறையாகத் தரையிலுட்காருதல் இவர்களுக்கு வழக்கமாதலின் கால்கள் குறுகின. அன்றியும், இவர்களின் நடையுடை பாவனைகளாலும் கந்தமூல ஆகாரத்தாலும் இவர்களின் உடல் வலிகுன்றியது. இவர்களுக்கு வயதுங் குறை; விரைவில் முதுமையு மெய்துகின்றது.

ஆனல் இவர்கள் புத்தியில் தீட்சணிய முள்ளவர்கள். எதையுங் கூறுமுன்னரே அறியும் புத்திபடைத்தவர்கள்.

கல்லூரிகளிலுள்ள சிறுவர்களனைவரும் அறிவின்மேல் ஆர்வமுடையவர். அறிவு விருத்தியின் பொருட்டே வருகின்றனர். இவர் கல்விகற்பதில் எத்துணைக் கஷ்டங்களிருப்பினும் அவற்றைப் பொருட்டாகக் கொள்கின்றிலர்.

அதிகாரிகளுக்கும் அரசிற்கும் உரிய கடமைகளைச் செலுத்துதலே ஜெப்பானியரின் முதற்கொள்கை. இதனால் ஜெப்பானியர்கள் அரசருக்கு உண்மை உறுதியுடையவர்களென்பது வெளியாகும். அரசர் நிமித்தம் தந்தை தாய் மக்கள் மனைவியரைக் கொன்ற ஜெப்பானியர்கள் அநேகருளரென்பதைச் சரித்திரத்திற் காணலாம்.

ஜெப்பான் வடபாகத்தில் பெரும் அலைமோதி ஜலம் வீடுகளிற் புகுந்த தருணத்தில் ஒருவன் ஓலமிட்டு அழிந்து போகும் மக்கள் மனைவியைக் கவனியாது அரசர் படத்தைக் காப்பாற்றினன். இவன் இராச விசுவாசத்தை அனைவரும் மெச்சினர்.

வெகுண்டு வரும் ஜெப்பானியக் கூட்டங்களில் சக்கரவர்த்தியின் பெயர் சொன்னல் உடனே கலகம் நின்று அமைதியுண்டாகும். சீன யுத்தத்தில் போர்முனைக்குச் சென்றவருள் சம்பளம் பெறுதவரநேகராம். சுயதேசாபிமானம் இவர்கட்கு மிகுதி. இவர்கள் சிறுவர்களாயிருக்கும் பொழுதே தேசாபிமானப் பால் பருகுகின்றனர். தேசாபிமானமில்லாத சிறுரைக் காண்டலரிது.

இவர்கட்குச் சாவென்றுற் பயமில்லை. குடும்பப் பெயருங் கீர்த்தியுமே இவர்கள் கவனத்திலுள. இவற்றிற்குக் காரணம், மனித வாழ்க்கையே கேடுதருமூலம் என்ற புத்த வுபதேசமென்று தோன்றும். போரில் அரசனுக்காக

உயிரிழத்தலே வீரம் என்ற கொள்கையுடைய ராதலின் மேனுட்டார் போன்று சாகப் பயப்படார். இதனுற்ருன் ஜெப்பானியர்களுள் தற்கொலை மிகுதி என்று தோன்று கிறது. சிற்சில சந்தர்ப்பங்களில் உயிரெடுத்தலே பெருமை வாய்ந்த வீரச்செயலென்ற கொள்கை இவர்கட்குண்டு. முன்னரசாட்சி காலத்தில் கொலைசெய்த வீரனைத் தற் கொலைசெய்து கொள்ளச் சட்டம் விதித்தனர்.

ஜெப்பானில் ஆண்டுதோறும் 7,000 தற்கொலைகள் நேரிடுகின்றன. தற்கொலை செய்வதற்கு அற்பசொற்ப நியா யம் போதும். நெல்விளைவு குறையின் தற்கொலை மிகுந்தும், விளைவு மிகுந்தால் தற்கொலை குன்றியும் வருகின்றதைத் தேசவிருத்தாந்தங்களிற் காணலாம். சுகக்குறைவாலும் சூட் டின் மிகுதி பொறுக்கமாட்டாமலும் தற்கொலைசெய்பவர் அநேகர்.

ஜெப்பானில் மணமுடித்தல் இந்தியாவில் நடப்பது போன்றே. மணமகனும் மணமகளும் ஒருவரை யொருவர் சந்தித்தல் கிடையாது. கல்யாணப் பக்குவம் வந்த பிள்ளை யின் பெற்ருேர் பெண்ணைப் பார்த்து வரும்படி ஒருவரை அனுப்புவர். அவர் அங்ஙனம் பார்த்துப் பெண்ணின் பெற்ருேர் சம்மதங்கேட்டுத் திரும்பிவந்து தம்மை அனுப் பிய மணமகனுடைய பெற்ருேரிடந்தெரிவிப்பர். இருதாத் தாரும் ஒத்துக்கொள்ளின் மாப்பிள்ளை பெண் இருவருக்கும் மணவிஷயம் அறிவிப்பர். இவர்கள் ஒருவரொருவரைப் பாராத போதிலும் பெற்ருேர் ஆணையைச் சிரமேற் கொள் வர். இதனுற் கேடொன்றும் விளைவதாகத் தெரியவில்லை.

ஜெப்பானியர் சுத்தமுள்ளவர்கள். தினசரி பலதடவை ஸ்நானஞ் செய்கின்றனர். கூலிவேலை செய்பவர்களும் தினந் தோறுங் குளியாதிரார். இவர்களுபயோகப்படுத்தும் வெந்

நீரும் சீதோஷ்ணக் கருவியின்படி நூற்றுப்பத்துப் பிர மாண முள்ளதாயிருக்கும்.

ஒவ்வொரு வீட்டிலும் குடும்பமெல்லா மொன்ருகக் குளிக்கத்தக்க பெரிய தொட்டியொன்றுண்டு. இஃதன்றி, பட்டணங்களிலும் நகரங்களிலும் பெரிய வெந்நீர்த் தொட்டிகளுள. அவற்றிற் குளிப்பதற்கு ஒரு காசு கொடுத்தாற் போதும். ஜெப்பானியர் வித்தியாச மின்றி ஆண் பெண் சிறுவர் எல்லோரும் ஒன்ருகக் குளிப்பர்.

இயற்கையில் சூடான ஊற்றுக்கள் ஜெப்பான் தேச மெங்கும் உள. இவற்றிற் குளிப்பதாலும் இவற்றின் நீரைப் பருகுவதாலும் உடற்சுகமுண்டாம். இதற்காக ஜனங்கள் ஆயிரக்கணக்காகத் திரண்டு போவார்கள்.

ஜெப்பானியர்கள் மரியாதை யுள்ளவர்கள். இவர்கள் ஒழுக்கச் சிறப்பால் கீழ்த்திசைப் பிரஞ்சுக்கார ரெனப்படு வர். இவர்கள் மரியாதையான நடையைச் சத்தியத் தினும் மேன்மையினும் பெரிதாகக் கொள்கின்றனர். பொய் சொல்லுதல், அவமரியாதையாக நடத்தல், இவ்விரண்டி னும் எது பாதகமில்லாதது என்று ஜெப்பானிய னொருவ னைக் கேட்பின் பொய் சொல்லுதல் பாதகமில்லை யென்று உடனே விடையளிப்பான். இத்தகைய வொழுக்கம் வெளி வேடம் என்பர் மேனுட்டார். ஏனெனின் தம்போலிய ரைக் காணினும் பெரியோருக்குரிய உபசாரஞ் செய்தல் ஜெப்பானியருக்கு வழக்கம், ஆங்கிலேயருக்கு வழக்கமன்று. அன்றியும் இந்தியாவில் வழங்குகிறபடி ஜெப்பானிலும் சாதிக்கும் யோக்கியதைக்குந் தக்கபடி உபசாரம் வேறு படும். ஜெப்பானியர் ஐவர் ஒருவாசலிற் புக நேரிட்டால் ஒவ்வொருவரும் யார் முன் புகுதல் என்று சந்தேகித்துத்

தீர்மானியாமற் புகார். வீதியிற் சிறுபிள்ளையைக் கண்டா லும் ஜெப்பானியர் தலைப்பாகையைத் தூக்காமற் பேசத் துணியார்.

மரியாதையான நல்ல நடையும், கல்வி தொழில் ஆராய்ச்சி யின்பமும், வாழ்க்கை வசதிகட்கு ஏற்பச் சுகமாக வாழுஞ் சத்தியும் நாகரிக வடையாளங்களெனின், ஜெப்பானியர் நாகரிகமுள்ளவர்களே. இவர்களுக்கு நாகரிக மேற்பட்டு ஆயிரமாண்டுகள் கழிந்தன என்றனர் ஒரு பிரபல கிரந்தகர்த்தர். ஆங்கிலேயருடைய நாகரிகத்திற்கும் இதற்கும் வித்தியாச முளதெனினும், புராதனமாக வரும் இவர்களின் நாகரிகமும் சிறந்து ஒழுங்காக வளர்ந்ததே.

சீனரின் நாகரிகம் வெகு புராதனமானது. உழவு நடாத்தும் வகைகளிலும், அச்சடித்தலிலும், வெடிமருந்து செய்வதிலும், மாலுமியின் திசைகாட்டுங்கருவி யுண்டு பண்ணுதலிலும் சீனர் வெகுகாலமாகச் சிறந்துவிளங்கினர். ஐரோப்பா கண்டத்தின் வடபாகத்தில் ஐரோப்பியர் மிருகங்களைப்போன்று வனங்களிற் றிரிந்த பொழுது சீனர்கள் பட்டாடை யுடுத்தி நகரங்களிலும் பட்டணங்களிலும் வசித்து வந்தனர்.

எவரும் போற்றத்தக்க இவர்களின் நாகரிகம் ஜெப்பான் தேசத்தில் 1868ம்-ஆண்டு வரை பரவியது. அதன்பின் மேனாட்டு நாகரிகம் அதிதீவிரமாகப் பரவிவருகின்றது. இதைக் கண்டு பிரமிக்காதவரிலர். அந்நிய நாகரிகம் இத்துணைத் துரிதமாக ஒரு தேசத்திற் பரவியதை உலக சரித்திரத்தில் யாம் வாசித்ததில்லை. தற்கால ஜெப்பானியர்களின் நாகரிகம் ஐரோப்பியரதே ஆயினும் உண்ணாட்டு நாகரிகப் பூச்சுத்துலங்கா நிற்கும். ஜெப்பானில் நான்கு மதங்கள்

அனுசரிக்கப்படுகின்றன. ஷின்ரூேமதம் ஒன்று, அப்பதத்தின் அர்த்தம் 'கடவுளர் வழி.' பூர்வத்தில் இயற்கைப் பொருள்களையும் முன்னோர்களையும் ஆராதித்ததற்கு இப்பெயர் கொடுக்கப்பட்டது. இவ்வாராதனையைப் பற்றிப் புராணகதைகளுமுள. முன்னோர்கள் வணக்கஞ் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது; முன்னோர்கள் தேவர்களாகப் பாவிக்கப்படுகின்றனர். இம்மதத்தின்படி அரசகுடும்பம் தெய்வீகமாக உற்பத்தியானது. ஆதலால் அதற்குப் பணிந்து பூசை செய்தல் ஜெப்பானியர் கடமை. இதனினும் விசேடம் அரச குடும்பத்தில் மறைந்த முன்னோர்களைப் பூசித்தல். அன்றியும், இம்மதச்சார்பினருக்கு சுவர்க்கமும் நரகமும் கிடையா, இடைப்பட்ட பிதிர் ராச்சியமொன்று மட்டுமுண்டு. இம்மதத்தின் முக்கிய கொள்கைகள்: இராசனைப் பூசைசெய்தல், மனச்சாட்சிப்படி நடத்தல். ஜெப்பானியரில் பெரும்பான்மையோரும் ஷின்ரூே மதந் தழுவுவோரே.

இதைத்தவிர புத்தமதமும், கன்பூசியஸ்மதமும், டேன்ரிக்கியோ மதமும் அனுஷ்டிக்கப்படுகின்றன.

இராசாங்கச் சர்வகலாசாலை யொன்றுளது. இது மேனாட்டுச் சர்வகலாசாலைகளை ஒத்து நடப்பது.

ஜெப்பானியர் விசித்திரத் தொழிற்காரர். உலகத்தில் மிக்க வழகுபொருந்திய இந்நாட்டில் வாழ்வோருக்கு வனப்பின் மேல் ஆசை மிகுதி.

ஜெப்பானியர் ஆட்சி நாள்தோறும் வளர்ந்து சிறக்கின்றது. இவர்களுடைய சட்டங்களும் மேனாட்டார் சட்டங்கள் போன்றே இருக்கின்றன.

ஜெப்பானியர் ரெயில்களையும் ஆங்கிலேயர் மாதிரியே போட்டிருக்கின்றனர். அவற்றில் வேலை செய்யும் உத்தியோகஸ்தர்களும் வெகு மரியாதையுள்ளவர்கள். முக்கியமான பட்டணங்களுக்கெல்லாம் ரெயில் போடப்பட்டிருக்கின்றது. நீராவிப் படகுகள் மிகுந்து உபயோகப்படுகின்றன. தந்தி ஏற்பாடுஞ் சிறந்ததே. தந்திக்கூலி விகிதங்கள் மற்ற விடங்களிலுள்ளதைவிடக் குறைவாம்.

ஜெப்பான் தேசமுழுவதிலும் தபால் ஆபீஸ் இல்லாத கிராமமாயினும் குக்கிராமமாயினுங் கிடையாது. தபாற்கூலியும் வெகுகுறைவு. ஒவ்வொரு தபாலாபீசிலும் ஸேவிங்க்ஸ் பாங்கி (மீந்த பணத்தை வட்டிக்குப் போட்டுவைக்குமிடம்) உண்டு. அதிலும் நல்ல வட்டி கிடைக்கின்றது.

வேறு பாங்கிகளும் உள. அவை மேனாட்டுப் பாங்கிகள் போன்றே கிரமமாக நடந்து வருகின்றன.

பெரிய நகரங்களில் மின்சார யந்திரங்கள் மிகுதி. ஆதலால் மின்சாரம் அதிக உபயோகத்திலிருக்கின்றது.

கிராமங்களில் வசிப்போர் தொகை மிகுதி. கிராமவாசிகள் கொஞ்சக் காலமாகப் பட்டணங்களில் வந்து சேருகின்றனர். இதனால் தேசத்திற்குக் கேடுவிளையுமோவென்று சிலர் ஐயமுறுகின்றனர்.

சென்ற முப்பத்தைந்து வருடங்களில் ஜெப்பானியர் கல்வியிலுங் கைத்தொழிலிலுஞ் சிறந்து வர்த்தகச் செல்வம் பெற்று யுத்தப் பயிற்சியிற்றேறி நாவாய்கள் துரகபதாதிகளுடன் கரடிபோன்ற ருஷியர்களுடன் போர்புரியுஞ் சத்தி பெற்றனர். இவ்விரண்டு சாதியாருக்கும் நடந்த யுத்தமே இருவரின் சிறப்பை விளக்கும்.

இன்று நடந்துவரும் ஐரோப்பிய மஹாயுத்தத்தில் ஜெப்பானியர் ருஷியருக்குப் பொன்னும் பொருளும் படையும் மருந்துங் கொடுத்துதவி வருவதை நாம் அறிவோம். அற்பசொற்பமான தீவுகளிலுள்ளவர்கள் இவ்வண்ணம் சிறப்புற்று ஐரோப்பியக் கரடியை வசப்படுத்திப் பீடுபெற்ருரெனின் நூற்ருண்டுகளாக நன்மை நாடும் துரைத்தனத்தின் கீழ்வாழும் கண்டவாசிகளாகிய நாம் உயர்கதியடைவதில் யாதுதடை. குடியுயரக் கோலுயரும் என்றனள் ஔவை மூதாட்டியாரும்.

"நீல மாமிடற் ருலவா யினுன்
பால தாயினர் ஞால மாள்வரே"

---

## ஏழாம் இரவு.

"இன்று சனிவாரம். சனி கேடு செய்பவனென்பது சோதிடத்துணிவு. சனி தனதபகாரத்தில் நன்மை செய்வானேல் பின்கெடுப்பன், முன் கெடுதி செய்வானேல் பின் அருளுவன் என்பர் ஆன்றோர். இவ்வாறு நன்மை தீமைக்கதிபனாகிய சனியைச் சனீஸ்வரனென்று கூறுதல் மரபாம். 'வல்லான் வகுத்ததே வாய்க்கால்' என்றார் தாயுமானவரும். பார்வையிற் கெம்பீரமும் பேச்சில் வல்லபமும் செய்கையிற்பிரதாபமும் பெற்ற சனிபகவான் பெயர்வாய்ந்த சனிபதி யாகிய நம் நண்பர் அசரீரியென்ற விஷயத்தைப் பற்றிப் பேசுவர். யாதாயினும் ஒருநன்மையை நாடும் எம்மனிதரும் தங்களுடைய விருப்பப்படி எவரேனும் பேசும் வார்த்தை செவிப்படின் அதை அசரீரி யென்றும், தெய்வ சம்மதமென்றும் சொல்லுதல் வழக்கம். இதைப்பற்றித் தற்கால ஆங்கில நாடகக்கவி யொருவர் நாடகமெழுதியுளர். நம் நண்பர் அவற்றையெல்லாம் விவரமாகக்கூறுவர். அதனால் அவர் கூற்றைக் கேட்டு ஆனந்தித்து உய்வீர்களாக" என்று தலைமைவகித்த சம்பூரணர் வேண்டிக்கொள்ளவும், சனிபதி பேசவாரம்பித்தனர்.

### அசரீரி.

"பண்புடையீர், பாசமுடையீர், பல்லாண்டு புகழுடையீர்—போற்றிக்கேண்மின், பகவான் உளன், பகுத்தறிவுடையேம் யாம். தனக்குவமையில்லாதான் கட்புலனுக்கு விளங்காதவன். செவிப்புலனுக்கு ஒருவாறு தம்மைத்தெரிவிப்பன். இவ்வாறு தெரிவித்தலே அசரீரியாம்.

ஒரு நகரத்திலே தந்தை தாய் இருவரையும் இழந்த ஒரு காரிகை அந்த நகரத்திலுள்ள பட்டுப்புடவை நெய்யும் யந்திரசாலையிற் சிற்றூழியஞ் செய்யத் தலைப்பட்டனள். அவளுக்கு வருஷம் முந்நூற்று அறுபத்தைந்து நாளிலும் வேலையுண்டு. ஆனால் முதல்வன் கிருபையால் தைமாதப்பிறப்பு அன்றுமட்டும் அவளுக்கு ஓய்வு கிடைத்தது. ஆதலால் அவள் அந்நாளெல்லாம் களியாட்டயர உத்தேசித்து அருணோதயத்திற் படுக்கை விட்டெழுந்து, ஆடை தரித்துக்கொண்டே அன்று காலையிலும், மதியத்திலும், மாலையிலும், இரவிலும் இன்ன இன்ன விதமாகச் சந்தோஷிக்கவேண்டுமென்று மனத்தில் தீர்மானித்தாள். அஃதாவது, அந்நகரில் அவள் பெரும்பதவி பெற்றவர்களென்று நன்குமதித்த நால்வர்களில் ஒவ்வொருவரைப் போன்று குறிப்பிட்ட நேரங்களில் ஆனந்தம் அநுபவிக்க வேண்டு மென்பதே. இவ்வாறான பெருமித வெண்ணம் கொண்டிருந்தபடியால் அந்த ஓய்வுநாளில் மழைபெய்து அவளுடைய கோரிக்கை நிறைவேறாமற் போகும்படி கருணாநிதியாகிய கடவுள் செய்யார் என்பது அவளுடைய துணிபு. காலையில் எழுந்ததும் வீதிவழியே அவள் சந்தோஷமாய்ப் பாடிக்கொண்டு போயினள். தன் கள்ளப் புருஷனைத் தூண்டித் தன் சொந்தக் கணவனைக் கொல்வித்த பாதகியும் அவ்வன்னியபுருஷனும் தம் பாதகச் செயல்களைப்பற்றி உல்லாசமாகப் பேசி ஒருவரை யொருவர் ஆலிங்கனஞ் செய்த சமயத்தில் அக்கொலைபாதகனுடைய செவியில் காரிகை பாட்டின் 'விண்ணிலிருக்கும் விநாயகரே' என்ற கடைவரி பட்டதும், அவன் திடுக்கிட்டு, மனம் பதைத்துப் புழுங்கினன். பின்னர் அவ்வசனம் அவனுக்கு அறிவுச்சுடர் கொளுத்தியது. கொலைசெய்யத் தன்னை எழுப்பி விட்ட கண்ணாட்டியின் மேலிருந்த காமமும் கலைந்தது;

கருணையங் கடலாகிய கண்ணனடியே கதியென்று வீழ்ந்தனன். "செய்த குற்றத்தைப் பொறுத்தருள்க" என்று பிரார்த்தித்தனன். இவ்வாறு மனநோக்குக்கொண்டு மயங்கி விழுந்ததைக்கண்ட நீலியும் மனக்கலக்க முற்றனள்; 'மாதவன் மேலிருக்கின்றான்' என்று நினைத்துப் பதைத்தனள். 'பாவக்கடலில் ஆழ்ந்த பாதகியைப் பரவசப்படுத்துக' என்று பணிந்தனள். இவ்வாறு இருவரும் காரிகை வசனத்தைக் கேட்டுக் கருணைக் கிலக்காயினர்.

மதியத்திற் கல்லூரிச் சிறுவர்களில் சிலர் தங்களுடைய இஷ்டன் ஒருவனை எப்படிப் பரிகாசஞ் செய்து ஏமாற்றினோமென்று பேசிக்கொண்டிருந்தார்கள். அதாவது, சிநேகிதனுடைய பிரியையிடமிருந்து அவனுக்குக் கடிதங்கள் வந்தனபோலப் பொய்க்கடிதங்களை அவர்கள் வரைந்து அவனிடம் கொடுக்க அவன் அவையெல்லாம் உண்மையென்று நம்பி அவளை மணஞ் செய்யச் சம்மதித்தனன். மணம் நடந்தேறியதும் உண்மை விளங்கிற்று. உடனே அவன் மனம்நொந்து அவளுக்குப் பணத்தைக் கொடுத்து விலக்கிவிட எத்தனித்துக்கொண்டிருந்த பொழுது மேற்கூறிய காரிகை 'அவள் என்னை நேசிக்கச் சிறிது இடங்கொடு' என்று பாடிக்கொண்டு தெருவழியே சென்றனள். இதைக்கேட்டு அவன் மனம் இளகி இவளைத்தூர தீவுகளிற் கொண்டுபோயாவது இவளுடைய ஆத்தும இச்சையைப் பூரணஞ் செய்யவேண்டுமென்று நினைத்துத் தான் கொண்ட வெகுளியை வென்று அவளைத் தன்னுடன் சேர்த்துக்கொண்டான்.

மாலையில் மலைச்சாரலிலுள்ள ஒரு கொடுமுடியில் ஒரு தாயும் மகனும் சம்பாஷணை செய்துகொண்டிருந்தார்கள். சிறுவன் சுதேசபிமானி. அயல் தேசத்துச் சக்

கிரவர்த்தியைக் கொல்லுவதற்காகச் செய்திருக்கும் ஏற்பாட்டைப் பற்றித் தாயுடன் தருக்கித்தபொழுது அவள் "தேசத்துக்குக் கெடுதிகள் நேரிட்டிருக்கின்றன என்பது மனோகற்பிதமே, சுதேசநேசமென்ப தெல்லாம் தம் மேம்பாடும் சுயநயமும் பாராட்டுபவரின் இலட்சியமே" யென்று சொல்லித் தன்மகன் அயலூருக்கு அன்றுபோகாமல் மறுநாட் காலையிற்போகும்படி இணக்கினள். தாய்வார்த்தைக் கிணங்கும் தருவாயிற் சாலியப்பெண் 'அரசன் சாக வந்த அவசரம் என்ன' என்று பாடிக்கொண்டு போக, சிறுவன் 'அப்பேர்ப்பட்ட அரசன் அல்லனே' என்று நினைத்துப் பின்னும் வாக்கு எப்படிவருகிறதென்று கவனித்தனன். 'உலகந்தொட்டது முதல் அரசர்களுக்கு அத்தன்மையான அருளுண்டு' என்ற வாக்குப்பிறந்தது. உடனே 'இது தெய்வவாக்கு' இது என்னை அழைக்கிறது என்று சொல்லி, வெளியேகி, கொடுமுடியில் அவன் இரவில் இருந்தால் அவனைப் பிடித்துச் சிறைசெய்யத் தேடித்திரியும் ஒற்றர்கள் கண்ணுக் கெதிர்ப்படாமல் தப்பித்துக்கொண்டான்.

இரவில் அந்நெசவுப் பெண் பிரதானமானகோயிலின் அருகேசென்றனள். அங்குள்ள கண்காணி தன்னுடைய சகோதரன் மகளுடன் சோரனையனுப்பிக் கெட்டவழியிற் புகுத்தித் தொலைத்தாலொழியத் தனக்குப்பின் தன்னுடைய ஐசுவரியமெல்லாம் அவளுக்குச் சென்றுவிடும் என்று நினைத்துக் கொண்டிருந்தபொழுது அந்தக்காரிகை 'திடீரென்று கடவுள் என்னைத் தன்னடி சேர்த்தார்' என்று பாடிச் சென்றனள். இவ்வசரீரியைக்கேட்ட கண்காணி அந்தச் சோரனைப் பிடித்துக்கொண்டு வாருங்கள் என்று உத்தரவுசெய்தான். அங்ஙனமே அவர்கள் அவனைப்பிடித்துச் சிறையிலிட்டனர்.

மேற்கூறிய நான்கு கதைகளும் அசரீரி இவ்வாறு ஜனங்களுக்கு நன்மை பயக்கின்றது என்பதற்குத் திருஷ்டாந்தங்களா யிருக்கின்றன. சுபமஸ்து.

“ பரனையே நினைந்து பாவி யுய்மினே ”

---

## எட்டாம் இரவு.

"இறைவனருளால் ஏழிரவிலும் பிரசங்கங்கள் சிறப்பாக நடந்தேறின. நாளுக்குநாள் வந்துகேட்பவர் தொகை விருத்தியாகி வருகின்றதைப்பார்க்கும் யாம் பழவூர் வாசிகளின் விடாமுயற்சிக்கும் ஊக்கத்திற்கும் வந்தனமளிக்கக்கடமைப் பாடுடையேம். எவ்விதகாரணத்தினலாவது ஒருவன் தன்னுயிரைமாய்த்தல் கூடுமா, தகுதியா, என்பதைப்பற்றி இன்றிரவு பிரசங்கம் நிகழும். பீடைக்குக் காரணன் கேது. நிகழும் வெளிச்சத்தைத்தருபவரும் அவரே என்பர். இஃது எங்ஙனமாயினுமாகுக. தற்கொலை பெரியோருஞ் சிறியோரும், மேன்மக்களும் கீழ்மக்களும் புரிகின்றனர். இதன்காரணத்தை ஆராய்தல தத்துவநூலாராய்ச்சியும் நாகரிகமும் வளர்ந்துவரும் இந்நாளில் இன்றியமையாததாம். இந்த அரியபெரிய விஷயத்தைப்பற்றிக் கேதுரு என்பவர் எடுத்தோதுவர். யாமனைவரும்கண்ணுங் கருத்துமாக விருந்து கேட்போமாக." இங்ஙனந்தலைவர் முதன்மொழி பகர்ந்தனர். கேதுரு சபையார் முன்வந்து சரணஞ்செய்து தாமாராய்ந்தெழுதிய 'தற்கொலை' என்று மகுடஞ்சூட்டிய வியாசத்தை வாசித்தனர்.

### தற்கொலை வினவிடை.

"கேதமற்ற கேதாரன் கேண்மையோரே-நமஸ்காரம். எவருக்கும் புலப்படுமாறு தற்கொலையைப்பற்றி முருகன் விருதன் இருவருக்கும் நடந்த சம்பாஷணையை வினவிடை ரூபமாகத் தருகின்றேன். அந்தகாரப்போர்வையால் மூடப்பட்டவிஷயம் எழிலியொழிந்த மதியம்போன்று விளங்குமென்று நம்புகின்றேன்.

முருகன்:—துன்பமில்லாத மனிதப் பிறப்பில்லை. துன் பங்கள் தொகுதியாகவரின் தாங்குதல் கஷ்டம். எல்லாந் தெய்வச்செயலென்று வந்துறும் பல விடுக்கண்களையும் பொறுத்துக் கல்லினின்று நாருரித்தார் போன்று தீமையி னின்று நன்மை பெறலே சிறப்பாம். இப்போதனைப்படி நடப்பவர் சிலரேயாம். பொறுக்கக்கூடாத துன்பங்கள் வரின் உயிரை மாய்த்தல் நலமென்றே நினைக்கின்றேன். எனக்கு நாளுக்குநாள் வருத்தங்களதிகப் படுகின்றன. தற்கொலை செய்யலாமென்றாலோ படித்தகல்வி மனச்சல னஞ் செய்விக்கின்றது.

விருதன்:—இத்துணைக் கஷ்டப்படுவதேன். இறந்தா லென்னை ?

முருகன்:—இந்த யாக்கை யமைப்பு விசித்திரமான தால் அதை யழித்தல் கொடுமையே.

விருதன்:—தும்பி உன்னை விட விசித்திரவமைப்புப் பெற்ற தன்றோ ?

முருகன்:—அஃதன்று. மனிதனுக்கு யூகமும் ஒழுக் கமும் விசேடம்; மற்றச் சிருட்டிகளுக்கு இவை கிடையா.

விருதன்:—உனக்குப் பெருமை வாய்ந்துளதோ ? நல் லது, தும்பி முதலான சில பிராணிகளைக் காட்டிலும் நீ சிறப்புப் பெற்றாலும் உலகில் உன்னைவிட மேம்பட்ட பிரா ணிகளுமுண்டே. அன்றியும் கோடி கோடியாக மனிதர்க ளுளரே. அவர்களில் நீ ஒருவனே. நீகாலஞ்சென்றால் என்ன கெட்டுப்போய்விடும். மற்றவர்களில்லையோ ?

முருகன்:—முற்றிலும் ஒரே விதமான பிராணிகள் இரண்டு காண்டலரிது.

விருதன்:—வித்தியாசங்கள் பலவுளவாயின் உன்னால் ஏற்படும் வித்தியாசம் கோடிக்கணக்கில் ஒரு பாகந்தானே. கோடியிலொன்று கழிந்தால் கவனிப்பார் யார்?

முருகன்:—நீர் இதனை அறிய வல்லீர்.

விருதன்:—உனக்குப் பீடைகளுஞ் சஞ்சலங்களும் மிகுதி; அவற்றைப் பொறுக்குஞ் சக்தியுங் கிடையாது. ஆதலால் சாதலே தகுதி.

முருகன்:—என்றும் ஒரே மாதிரியாக விருக்காது. இரவொழிந்து பகல் வருதல் தினசரி அநுபவமே. என்னிடுக்கண்களுக்கும் தினகரன் வாரானோ? வருவானாயின் இடுக்கண்களைக் களையும் எதுவைப் பெறுவேனன்றோ?

விருதன்:—என்ன விதங்களில் உன்னுடைய பீடைகளை நிவர்த்திசெய்யப்போகின்றாய்?

முருகன்:—நான் தற்கொலை செய்தால் வனப்பு மிகுந்த இயற்கை யமைப்பை இழக்கவேண்டும். மனித விருத்தி அறிவும் எனக்கில்லாமற் போகும். நான் மறைந்தாலும் ஞானசூனியனாயிருந்தாலும் நடப்பன நடக்குமே.

விருதன்:—இது தெரிந்திருந்தும் நீ கிலேசப்படுவதேன்?

முருகன்:—மனித விருத்திக்கு முடிவு கிடையாது. நான் உயிர் விடாதிருந்தால் அதிலொரு பாகத்தையாயினும் பார்ப்பேனன்றோ?

விருதன்:—மனித விருத்தி நத்தைபோல் நகரும். ஆயிரமாண்டுகள் கழிந்தாலும் விசேஷவிருத்தி காணாத

வருமை. அங்ஙனமாயின் உன் அற்பவாயுளில் என்ன விருத்தியைக் காணப்போகிறாய்? தவிரவும், உனக்கோ உடற்பீடைகள் பல, மனப்பீடைகளுக்குக் கணக்கில்லை. இப்படியிருக்கும் பொழுது நீ மனோகற்பிதஞ்செய்யும் விருத்தியை எவ்வாறு காணப்போகின்றாய்?

முருகன்:—கஷ்டங்களைப் பொறுக்காமல் உயிரை விட்டேனானால் என்னைக் கோழையன் என்பார்களே!

விருதன்:—நீ சாகப்பிரியப்பட்டும் சாகாதிருந்தால் அது கோழை யாகாதோ? இருவழிகளில் நீ கோழையன். வாழ்க்கைத்துன்பங்களைப் பொறுக்கு மியல்பில்லாத நீ உயிரையும் விடமாட்டாய். ஏனெனில் ஜனங்களின் நிந்தைக்கு நீ பின்வாங்குகின்றாய்; உன்னை நேசிப்பார் ஒருவருமில்லை. உலகத்தில் உனக்கு அன்புத்தளைகள் கிடையா. நீ மற்றவர்களின் நிந்தையைப் பொருளாக மதிக்கவேண்டிய நிமித்தமொன்று மில்லை. உலகத்தார் உன்னை நிந்திக்கவு மாட்டார்கள். உன்னை நினைக்கவு மாட்டார்கள்.

முருகன்:—உலகத்தார் என்னை மறந்துவிடுவார்களென்றதனால் நான் மறைய நியாயமில்லை. உலகத்தார்கள் மறவாதிருக்கும்படி நற்காரியங்களைச் செய்தலே என்னுடைய கடமையாக ஏற்படும், அங்ஙனமாயின் உயிரைக் காப்பாற்றுதலே நன்மையாம்.

விருதன்:—வாலிபருக்கு இக்கணுக்களுரியன. வயது முதிர முதிர இவை சூரியனைக்கண்ட பனிபோல நீங்கும். ஆதலால் இக்கணுக்களை ஒழித்தலே கருதி மனிதனால் விசேஷமாய் ஒன்றை நினைக்கவுஞ் செய்யவும் முடியாது. வாழ்க்கையின் முடிவு மோசம்போதலே. சாதலே தக்க மருந்து.

முருகன்:—மனிதன் எதையும் அறிந்து செய்யவும் வல்லமையுள்ளான் என்பது திண்ணம். ஏனெனில் அற்புதங்களை அறிந்து செய்த பெரியோர்கள் இருந்திருக்கின்றனர்.

விருதன்:—இருந்திருக்கலாம்; அவர்கள் அங்ஙனஞ் செய்ததாக நினைத்திருக்கலாம்; சிலர் மனப்பாக்கிய முளர். அவர்களுடைய மனப்பாக்கியத்திலிருந்து இத்தகைய மனோபாவனைக ளுண்டாயிருக்கலாம்.

முருகன்:—இந்த வாழ்க்கை கெட்டது. இதை யொழித்தேனுயின், அடுத்த வாழ்வு சிறந்திருக்குமென்பது என்ன நிச்சயம். இதனினுங் கேடாயிருக்கலாம். இங்குள்ள கஷ்டங்களைவிடப் பன் மடங்கு அதிகப்பட்டுமிருக்கலாம்.

விருதன்:—இறந்து போனவர்களில் எவர்களேனும் புதிதாக உயிர்பெற்று வந்திருக்கின்றனரென்று கேட்டிருக்கின்ருயோ?

முருகன்:—இறந்தோர் எழார் என்று உம்மால் நிலை நாட்டமுடியாது. வெளித்தோற்றங்களால் இறந்தவர் எழும்பார் எனநினைக்க ஏதுவுண்டு. ஆயினும் மனிதன் எண்ணத்தில் பரம ரகசியமான புதைபொருள் ஒன்றுண்டு. அது என்றும் நிலைபெறுவது. மனோரதியம் ஒன்றுளது. அதை இவ்வுலகில் காணுவார் இலர். உலகெங்கும் பார்த்தால் தேவ தச்சன் ஒருவனுளன் என்றும், தேவ காரியம் ஒன்றின்றி உலகம் அமைக்கப்பட்டிராது என்றும் தோன்றும். ஒவ்வொரு மனிதனும் தன் னிழிசுபாவத்தை யொழித்து உயர்ந்த குணம் பெறவே முயலுகின்ருன் என்பது வெளியாகும். மனத்திற்குத்தோன்றும் ஐயங்களைத் தீர்க்கு

மிட மொன்றிருத்தல் வேண்டும். மனத்தில் ஜெனிக்கும் சங்கைகளைத் தீர்க்குந் திறமையோ வுமக்கில்லை. எனக்கு ஒரு சமுசய முண்டாகின்றதென்றால் வேறொரு சந்தேகத்தை நீர் கிளப்புகின்றீரே யொழிய ஜெனித்த சங்கையை சங்காரஞ் செய்யும் சத்தி பெற்றிலீர். உம்முடைய விவகாரத்தால் என்னிருமன மொருமன மாவதில்லை. ஐயங்களைக் கிளப்பி என்னை வாதித்தீர், வேறு ஐயங்கள் கிளம்பி அவற்றிற் பட்டு நீர் மாய்கின்றீர்.

விருதன்:—உனக்கு உற்பத்தி யுண்டென்று நீ ஒத்துக் கொள்வாய். சூனியத்தினின்றே நீ யுண்டானாய். சூனியமாக முடிவதில் என்னதடை?

முருகன்:— உற்பத்தியான தெல்லாம் முடிவு பெறுகின்றது என்பதை முதலில் நீர் உறுதிப்படுத்தவேண்டும். உண்டென்று நான் ஒத்துக்கொண்ட போதிலும் இப்பிறப்பிற்றான் என் சீவன் பிறந்ததென்று நீர் எங்ஙனஞ் சாதிப்பீர்? ஒவ்வொரு பிராணியும் பலவகைப் பிறப்புக்களை யடைந்திருக்கலாம்.

" புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்ச்
செல்லாது நின்ற வித்தாவர சங்கமத்து
ளெல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்"

என்று எம்பெருமானிடம் மாணிக்கவாசகர் முறையிட்டனரன்றோ? எனக்கு முந்திய பிறப்பு இன்னதென்று ஞாபகமில்லை. பிறப்பு வேறு படுதலால் மறதியுண்டாகலாம். நமக்கு ஆவேசம் வந்த காலத்தில் நாம் இன்னதெண்ணினோம் என்று நமக்குத்தெரிவதில்லை. கனவு காண்

கிறேம். அது மறைந்து விடுகின்றது. நாமும் அதை மறந்து விடுகிறேம். திரும்பவும் பரவசப்படுங்காலத்திலும் கனுக் காணுங் காலத்திலும் மறைந்தவை தோன்றுகின்றன. முந் திய பிறப்பை நான் மறுபடியும் எய்துவேனுயின் அதைப் பற்றிய ஞாபகமெனக்கு உண்டாகலாம். முந்திய பிறப்புச் சிறந்ததாக விருக்கலாம். அதனின்று இழிந்த நிமித்தத் தால் இப்பிறப்பிலும் மேலான எண்ணங்கள் எனக்கு உண்டாகின்றன போலும். கீழ்த்தரமான பிறப்புக்கள் பல வற்றை நான் கடந்து மேலான பிறப்பை இப்பொழுது பெற்றிருக்கும் நியாயத்தால் முந்திய பிறப்பை நான் மறந் திருக்கலாம். தவிரவும் நான் உடம்பெடுக்காத சத்தா யிருந்து ஞாபகவுணர்ச்சிக்கே யிடமில்லாதிருக்கலாம். சீவன் பொருளுடன் பரிணமித்த காலத்தில் ஞாபகத்திற் கிட முண்டு. இவையன்றியும், முற்பிறப்பைப் பற்றிய ஞாபகங் கள் சில வுண்டாகின்றன. இதனுல் இப்பிறப்பில் நான் புதி தாகப் பார்க்குஞ் சில பொருள்கள் பழையன போல் தோன்றுகின்றன. 'எங்கேயோ இதைப் பார்த்திருக்கின் றேன்' என்று ஞாபகம் வருதல் பூர்வ வாசனை யென்று கொள்ளவேண்டும்.

விருதன்:—எனக்கு நகைப்புண்டாகின்றது. உன்னு டைய சொப்பனங்களைப்பற்றி நான் உன்னுடன் வாதஞ் செய்யவில்லையே, நீ படுந் துன்பம் வாஸ்தவமாதலால் உயிர் விடுவதற்கு அது உனக்குப் போதுமானதே.

முருகன்:—வாஸ்தவம். ஆனல் உம்முடைய நியாயம் பிழைத்தது. நீர் வைத்த குறியுந்தவறியது. உம்முடைய போலி நியாயங்களால் நான் தற்கொலை செய்யா திருந்ததே விசேடம். நமக்குக் கஷ்டமான காலங்களில் நாம் தற்

கொலை செய்ய நினைத்தாலும், ஜீவபிராணிகளிலெதுவும் மாண்டு போகப் பிரியப்படாது. நிறைந்த வாழ்வும் உயர்ந்த பதவியுமே மனிதர் விரும்புவர். ஆதலால் தற்கொலை செய்வது அவிவிவேகம், கோழைத்தனம், நிந்தைக்கிடம். கஷ்டதிசையில் ஈசனடி போற்றலே பிணி தீர்க்கும் மருந்து. இவ்விஷயத்தைப் பற்றி ஆராய்ச்சி செய்ய விருப்புவீரேல் ஜெகப்பிரியராகிய ஷேக்ஸ்பியர் ஆக்கிய ஹாம்லெற்று என்னும் நாடகத்தில் மூன்ரும் அங்கம் முதற்களத்தையும், அடிஸன் வரைந்துள்ள கேற்ரே என்ற நாடகத்தின் ஐந்தாம் அங்கம் முதற் களத்தையும் வாசிப்பீராக.

" பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார் "

## ஒன்பதாம் இரவு.

"இன்றிரவு மாதுசிரோமணியாகிய இராகையின் பிரசங்கம் நிகழும். ஆதலால் பழவூர் மாதரசிகள் பலரும் வந்து கனப்படுத்துவரென்று தெரிகின்றது. அன்னார்க்கு இருப்பிடம் தனிமையாக ஏற்படுத்தவேண்டியதிருக்கின்றது" என்று பழவூர்த்தலைவராகிய சங்கரர் தம்மாட்களையனுப்பி மண்டபத்தை யலங்கரிக்கச்செய்து ஆடவரும் பெண்டிரும் ஒருவர்க்கொருவர் இடைஞ்சலின்றி யிருந்து இராகையின் பெரும்பேச்சைக் கேட்க ஏற்பாடு செய்தனர். குறித்தநேரத்திற் பழவூர்ப் பக்கலிலுள்ள பேரூர், மூதூர், முறையூர், நாகூர், திருப்பூர் முதலான சிவபதிகளிலிருந்து ஆண்மக்களும் பெண்மக்களும் வந்து மண்டபத்தில் குழுவினர். காற்றுநுழையவு முடியாதென்று சொல்லத்தக்க விதமாகக் கூடிய பெருங்கூட்டத்தைக் கண்ட பழவூர் வாசிகள், 'இன்றே எம்மூருக்குச் சிறப்புவாய்ந்தது. எங்கள்முன்னோர்காலத்திலும் எங்களுடைய ஆயுளிலிதுவரையிலும் இப்பெருங்குழாத்தை இவ்வூரிற் கண்டவர்களில்லை. எல்லாம் இறைவன்கிருபையே' என்று தத்தம் வீடுகளினின்று கம்பளங்களைக் கொண்டுவந்து மண்டபத்தின் முன் மணல்விரித்திருந்த விடத்தில் அவற்றை விரித்து அவைகளின்மீது தாங்களனைவரும் உட்கார்ந்துகொண்டு அயலூர் வாசிகளை மண்டபத்திலிருக்கச்செய்து கனப்படுத்தினர். குறிப்பிட்டநேரத்திற் பதின்மரும் மண்டபமேடையெய்தினர். குழுவியிருந்த பலரும் கரகோஷஞ்செய்தனர். உடனே வனப்பிலும் நல்லம்யாமென்னும் நடுவுநிலைமையிலும் உயர்ந்த ஸ்ரீமதியாகிய இராகை யென்பாள், 'பெண்களினுரிமைகள் இவையென்றும், அவற்றைப்பெறப் பெண்கள் முயலவேண்டுமென்றும், அங்ஙனம் முயற்சிப்பதில் ஆடவர்கள் இடையூறு செய்யா

மல் அன்னார்க்கு உதவியாயிருத்தல் வேண்டுமென்றும் முதலில் மொழிந்து, மூதாதைக்கும் பௌத்திரனுக்கும் நடந்த வொரு விநோத சம்பாஷணையை இனியதமிழ் மொழியில் யான் வரைந்துளேன், அதைக்கவனமாகக் கேட்குமாறு அன்பார்ந்த அம்மணிகளையும் ஐயன்மார்களையும் வேண்டுகின்றேன்' என்றுகூறி வியாசத்தைப் படித்தனள்.

பெண்களின் உரிமை : ஒரு விநோத சம்பாஷணை.

மூதாதை:—தற்காலத்திலுள்ள பெண்கள் குடும்பப் பணிவிடைச்சுமையினின்றும் நீங்கியிருத்தலால், தாங்கள் மேல் மினுக்கி ஆடவரை வசியஞ்செய்வதே நித்தியகருமங்களாகக் கொள்ளுகின்றார்களென்று நினைக்கின்றேன்.

பௌத்திரன்:—அவர்கள் இந்த ஸ்திதியை அடையு முன்னர், அடைந்த கஷ்டத்தை நாம் கவனிக்கவேண்டும். அவர்கள் மிக வூக்கமுள்ளவர்களாதலின், தாங்கள் உலகத்திற் கோராபரணமாயிருத்தல்பற்றி, பிறர் தங்களுக்கென்னான்றும் உபகாரிகளாக விருக்கச் சம்மதிக்கமாட்டார்க ளென்பது திண்ணம். குடும்பச்சுமையை விட்டொழிய அவர்களாவல் கொண்டது ஏனெனில் குடும்ப வேலையானது ஊக்கத்தைக் கெடுத்து உடலைத்தேய்த்தலேயாம். இவ்வாறு இச்சுமையினின்று நீங்கினபோதிலும் அவர்கள் சோம்பியிராது பொதுநன்மை விருத்தியின்பொருட்டு இன்பமான வழிகளி லுறுதியான நன்மைபயக்கும் வேலையைச் செய்து கொண்டேவருகின்றனர். ஆடவரைப்போன்றே அவர்களும் கைத்தொழிற்கூட்டத்தைச்சேர்ந்து, தாய்க்குரிய கடமைகளைச் செய்துமுடிக்கவேண்டிய காலந்தவிர மற்றைக்காலங்களில் தந்தம் வேலையைச் செய்வதனால் ஸ்திரீகளிலனேகர் தங்கள் ஆயுளில் ஐந்து, பத்து, பதினை

ந்து வருடங்களாயினும் கைத்தொழில்செய்கின்றனர். அவர்களிற் குழந்தை யற்றவர்கள் சீவகாலமெலாம் அத்தொழிலிலேயே அமர்ந்திருக்கின்றனர்.

மூதாதை:—மணம்புரிந்தபின்னரும் பெண்கள் கைத்தொழில்வேலையை விடுவதில்லையோ?

பௌத்திரன்:—ஆடவர் அங்ஙனஞ் செய்யாதிருக்க ஸ்திரீகள் ஏன் அவ்வாறு செய்தல்வேண்டும்? தற்காலத்திலுள்ள விவாகமானபெண்களுக்கு இல்லறத்திற்குரிய பொறுப்புக்களில்லையென்பது நீவிரறியாததன்றே. எப்பொழுதும் பாதுகாக்கும்படி புருடர்கள் பாலர்களாகவேயோ இருக்கின்றனர்?

மூதாதை:—நான் இளைஞனாயிருந்தகாலத்தில் (அதாவது நூறு வருடங்கட்குமுன்னர்) பெண்களிடம் கடுமையான வேலைவாங்குதல் நாகரிகக்குறைவென்று நினைக்கப்பட்டது. அப்படியிருக்கத் தற்காலத்தில் அவர்களிடம் எங்களைப்பார்க்கிலும் அதிகவேலை நீங்கள் வாங்குவது என்ன நாகரிகம்?

பௌத்திரன்:—ஆடவர் உழைத்தல் போலவே பெண்களும் உழைக்கின்றனர். ஆயினும் இக்காலத்து ஸ்திரீகள் களிப்புள்ளவர்களாயிருக்க நும் காலத்தவர்கள் நிர்ப்பந்த தசையிலிருந்ததேன்.? இக்காலத்தவர்கள் பூரித்திருப்பதன் காரணம் அவர்களும் ஆடவருடன்கூடித் தக்கவேலைசெய்து வருவதே. பெண்கள் ஆடவரைப்பார்க்கிலும் தேகவலியிற் குறைந்தவர்க ளானபடியாலும் இன்னுஞ் சில விசேட வழிகளில் கைத்தொழில்செய்யத் தகாதவர்களாகயிருப்பதனாலும், நாங்கள் அவர்களுக்குத் தகுந்த இலகுவான வேலை

யைக் கொடுப்பதல்லாமல் நாங்கள் செய்யுங் கடுமையான வேலையை எச்சமயத்தினுங் கொடுப்பதில்லை. மேலும் எங்களைப்போன்று அவர்கள் தினந்தோறும் வெகுநேரம் வேலை செய்வதுமில்லை; அவர்கள் இளைப்பாறும் பொருட்டு அவர்களுக்கு விடுதிமுறையும் அதிகமுண்டு; வேண்டிய போதெல்லாம் இளைப்பார இடங்கொடுப்பதுமுண்டு; பெண் களின் அழகும் வசிகரமுமே வேலைசெய்யு மாடவர்க்கு அதிக சந்தோஷத்தையும் மனவூக்கத்தையுங் கொடுக்கின்றன வென்று நாம் ஒத்துக்கொள்ளுகிறபடியால், அவர்கள் சக் திக்குத்தகுந்தபடி தினந்தோறும் குறிக்கப்பட்ட காலத்தில் வேலைசெய்வதனுல் தேகமனுேசௌக்கியங்க ளுண்டாகின்ற னவென்றுணர்ந்து அவர்களு மேதேனும் வேலைசெய்யச் சம் மதிக்கின்ருேம். முங்காலத்துப் பெண்கள் சாதாரணமாய் நோயாளிகளாயும் இந்நாட்களிலுள்ளவர்கள் பூரித்தவர்க ளாயு மிருப்பதற்குக் காரணம் இக்காலத்தவர்கள் சுகந்தரக் கூடிய மனவுற்சாகமான வேலைசெய்வதேயென்று நம்புகின் ருேம்.

மூதாதை:—தற்காலத்து வேலைசெய்யும் பெண்கள் கைத்தொழிற் கூட்டத்தாரைச் சேர்ந்தவர்களென்று அறி கின்றேன். ஆனுல் அவர்கள்வேலைக்கும் ஆடவர் வேலைக்கும் எவ்வளவோ தாரதம்மிய மிருக்க இருதிறத்தாரு மெவ்வாறு ஒரே சிட்சைக் குட்படக்கூடும்?

பௌத்திரன்:—இருதிறத்தாரையும் நடத்தும்விதம் வெவ்வேறே. வேலைசெய்யு மாதர்கள் தொழில்புரியும் ஆட வர்க்குதவியே செய்கின்ருர்கள். அவர்கள் தங்களுடைய முதன்மையான ஸ்திரீயின் ஏற்பாட்டின் வண்ணமே நடக் கின்றனர். ஆடவருளெவ்வாறு தளகர்த்தர்கள் நியமிக்கப்

பட்டு வருகின்றார்களோ அவ்வாறே மாதர்களுள்ளும் தலைவி முதலான உத்தியோகஸ்தர்கள் நியமிக்கப்பட்டு வருகின்றார்கள். பெண்படைத்தலைவி தேசாதிபதியுடன் மந்திராலோசனையில் வீற்றிருந்து பெண்டிர்கள் செய்யவேண்டிய வேலையைக் குறித்த சட்டதிட்ட விடயமாய இது கூடும், இது கூடாது என்று அபிப்பிராயங் கூறுகின்றாள். மேலும் பெண்கள நியாயாதிபதிகளாகவும் நியமிக்கப்பட்டு வருகின்றனர். ஒரு வழக்கில் இருகட்சிக்காரர்களும் மாதர்களாயிருப்பின் அவர்கள் சம்பந்தப்பட்ட வழக்குகளெல்லாம் மாதர் நீதிபதி முன்னரே தீர்க்கப்படும். ஆனால் அதே வழக்கில் வாதியாவது பிரதிவாதியாவது ஆடவராயிருக்கும் பட்சத்தில் அவர்கள் இரண்டிலொருபால் நீதிபதியின் தீர்ப்புக்குட்படுவார்கள்.

மூதாதை:—உங்கள் முறைப்படி பெண்ணரசாட்சியானது ஆட்சிக்குள் ஒருவித ஆட்சிபோலும்.

பௌத்திரன்:—நீர் சொல்லுவது ஒருவாறுண்மையே. உள்ளடங்கிய ஆட்சியினால் தேசத்தார்க்கு மிகக்கேடு சம்பவியாதென்பதை நீவிரே ஒத்துக்கொள்வீர். இருபாலர்தம் விசேடித்த வித்தியாசத்தன்மையை யுணராதிருத்தலே நுங் கூட்டத்தாருக்குண்டான வெண்ணிறந்த குறைவுகளிலொன்று. மேற்படியார் தம்பெரிய வித்தியாசங்களை யுணராததற்குக் காரணம் அவர்கட்குண்டான மோகமே. அவ வித்தியாசங்களை நீக்கமுயலாது அவற்றின் போக்குக்கிடங் கொடுத்தலே அவர்களுள் ஒருவர்க்கொருவ ரளிக்குஞ்சுகத்தை நிரம்பவும் விருத்திசெய்கின்றது. நுங்காலத்துப்பெண்கள் ஆடவருடன் இயல்புக்கு விரோதமான வாதஞ்செய்து காலம் போக்கினரேயன்றி வேறு சற்காலக்ஷேபஞ் செய்

தார்களில்லே. ஆனல் நாங்கள் எங்கள் பெண்டிர்களுக்குத் தக்க காலக்ஷேபங்களேயும் முன்னுக்குவரும் வழிகளேயுங் கோடி கோடியாத் தேடிக்கொடுத்திருக்கின்ரும். ஆகையினல் அவர்கள் மிகவும் ஆநந்தமாயிருக்கின்ருர்களென்று நான் உறுதியாய்ச் சொல்லுவேன். முங்காலத்துப்பெண்களோ முங்காலத்து நாகரிகத்திற்கே இரையானர்கள். அவர்களது நிலேமையைத் தற்காலத்திற் சற்று ஊகிக்கில் உடம்பு நடுங்குகின்றது. ஏனெனில், அவர்கள் செய்தவேலேயோ இளேப்பையும் களேப்பையும் உண்டுபண்ணிற்று; அவர்கள் தம் ஆயுளெல்லாம் மிருகங்களேப்போன்று அறிவினே அபிவிர்த்தி செய்யாமற் கழித்தனர்; அவர்கள் விவாகப்பக்குவமடைந்த காலத்திலும் உடல் சிறுத்தவர்களாகவேயிருந்தார்கள்; அவர்கள் வீட்டைவிட்டு வெளியேறினவர்களல்லர்; அவர்கள் சுயகாரியங்களேத் தவிர பிறர் நன்மைகளேக் கருதினருமல்லர்; நான் இவ்வண்ணங்கூறியது உடம்பினின்றும் உயிர் நீங்கும்படி வேலேவாங்கப்பட்ட ஏழைவகுப்பினரைப் பற்றியன்று, தகுந்த செல்வரைப்பற்றியே. மனத்தைவருத்தும் பெரும் விசனங்களேயும் தினந்தோறுமுண்டாகின்ற அற்பக்கவலேகளேயும்விட்டு அவர்கள் ஒருகாலும் ஓய்ந்திருந்ததில்லே; எக்காலத்திலும் பொதுஜன விவகாரங்களில் அவர்கள் தலேயிடாமல் குடும்ப விஷயங்களிலேயே காலத்தைத் தள்ளினர்கள். இவ்வித சீவனம் மனிதர்களது மூளேயையுங்கூடக் கெடுத்து அவர்களேப் பித்தர்களாக்கிவிடுந் தன்மைத்து. இவையெல்லாம் தற்காலத்தில் மாறிவிட்டன. தற்காலத்துப் பெண்டிர்களில் எவராயினும் ஆணுய்ப்பிறந்தோமில்லேயே யென்று சொல்லக்கேட்பது அரிது; அதுபோலவே பெற்ருேர்கள் தமக்குப் பெண் பிறவாமல் ஆண்பிறந்ததில்லேயேயென்று

சொல்வதும் அரிது. நஞ்சிறுவர்களைப்போன்றே நஞ்சிறுமிகளும் எத்துணையும் முன்னுக்கு வரல்வேண்டுமென்ற சிந்தனையுடையவர்களா யிருக்கின்றனர். அவர்கள் பக்குவமடைந்து மணம்புரியுங்காலத்தில் மணம்புரிதலினால் புருடருக்குச் சிறையாகின்றோமே என்று நினைப்பதில்லை; அவர்கள் மணம்புரிவதனால் உலகத்தில் நடக்கும் விசேடித்த விவகாரங்கட்கும், பெருந்தொழில்கட்கும் அந்நியராவதுமில்லை. ஆனால் அவர்கள் குழந்தைபெற்றபின் குழந்தையைப்பற்றிய சிந்தனைகள் மனத்தைக் கவரும்போழ்து மட்டும் உலக விடயங்களில் தலைகொடாது சற்றுள்ளடங்கியிருக்கின்றனர். பின்னர்த் தங்களுக்குப் பிரியமானகாலத்தில் தோழிகளுடன் சேர்ந்து முன்போலவே வேலைசெய்கின்றார்களாகையால் அவர்களுடைய ஒற்றுமை நீங்குவதில்லை. இத்தகைய காரணங்களால் இக்காலத்துப்பெண்கள் முற்காலத்தவரைவிட மிகவும் ஆநந்த சுதந்தரர்களாயிருக்கின்றனர்; அவர்கள் புருடர்கட்கு அளிக்கு மின்ப சுகம் அதற்குத்தக்கபடி நாளடைவில் விருத்தியாயிருக்கின்றது.

முதாதை:—கன்னியர்கள் கைத்தொழிற் சங்கத்தின் அவயவிகளாகி அதிற் கீர்த்திபெற அவர்களுக்கிருக்கும் விருப்பத்தை உத்தேசித்தால் அவ்வவாவானது அவர்களை மணம் புரியவொட்டாது தடுக்குந் தன்மைத்தென்று நான் நினைக்கின்றேன்.

பௌத்திரன்:—அது விஷயத்தில் உமக்கு அவ்வளவு கவலை வேண்டியதில்லை. நாளடைவில் ஆண் பெண் இவர்கள்தங் குணாதிசயங்கள் எவ்வித வேற்றுமை யடைந்தபோதிலும் அவர்களுக்குண்டான பற்றுதல் மாறாதிருக்கும்படி

படைத்தவர் போதுமான கவனம் செலுத்தியிருக்கின்றனர். உம்முடைய நாளிற் சனங்கள் தங்களுயிரைக் காப்பாற்றுவதற்காகப் பட்ட கஷ்டத்தினால் அவர்களுக்கு வேறு விஷயங்களைச்சிந்திக்க நேரமில்லாமற் போயிற்று. அன்றியும், அவர்கட்கு வருங்காலத்தைப்பற்றி நிச்சயமில்லாததனாற் பெற்றோர் பொறுப்புக்களை ஏற்றுக்கொள்வது அபராதத்துக் கேதுவான ஓர் அபாயமாகத் தோன்றிற்று. அக்காலத்திலுங்கூட வதுவைசெய்தலும் வதுவைசெய்வித்தலும் உளவென்பதே நான் சொல்லிய விஷயத்திற்குத் தக்கசான்று பகருகின்றது. இக்காலத்திலுள்ள அன்பு விஷயத்தைப்பற்றிப் பேசும்பொழுது, ஆண் பெண் இருபாலரும் உதரசீவனத்திற் காகப் படும் கவலை நீங்கவே அவர்கள் மனம் காமத்தாற் பீடிக்கப் படுகின்றதென்று நம்முடைய நூலாசிரியருள் ஒருவர் சொல்லுகின்றார். அவ்வுரை ஒருவாறு பாரித்த வுரையாயிருக்கலாமென்று நினைக்கின்றேன். வதுவைசெய்வது மாதர்தங் கைத்தொழிலுக்கு இடையூறன்றாதலால் கைத்தொழில் செய்யும் பெண்டிர் குழாத்தில் உன்னத ஸ்தானங்களெல்லாம் மனைவிகட்கும் மகப்பெற்ற மாதர்கட்கும் கொடுக்கப் பட்டிருக்கின்றன. ஏனெனில் அவர்கள் மட்டுமே தங்கள் குழாத்திற்குத் தகுந்த பிரதிநிதிகள்.

முதாதை:—வேலைசெய்யும் ஆடவர்க்கு முன்பணம் கொடுப்பது போலப் பெண்கட்கும் கொடுப்பதுண்டோ?

பௌத்திரன்:—தடை யென்ன?

முதாதை:—பெண்கள் குடும்பப் பொறுப்புக்களினிமித்தம் வேலை செய்யாது அடிக்கடி நின்றுவிடுவதனால் அவர்கட்குக் கொடுக்கும் முன்பணம் மிகவும் சிறிதென்று நினைக்கின்றேன்.

பௌத்திரன்:—இல்லை, இல்லை. நம்முடைய சனங்களெல்லோரும் ஒரே விதமாய்ப் பராமரிக்கப்பட்டு வருகின்றார்கள். இந்தச்சட்டத்திற்கு விலக்குக்கிடையாது. ஆனல் நீவிர் சொல்லும் இடையூறுகளால் ஏதேனும் வித்தியாசமுண்டானல் அவர்களுக்குக் கொடுக்கும் முன்பணம் அதிகமே தவிரக் குறைவில்லை. யாதெனில் உலகத்திற் பிள்ளை பெற்று வளர்த்தலைவிட அதிக நன்றியறிதலுடைய கருமம் வேறுளதென்று நினைக்கீறீரா? உம்மபிப்பிராயப்படி நல்ல பெற்ருேர்களைவிட உலகத்தார் மெய்ச்சக்கூடியவர் எவருளர்? நாம் மாண்டபின்னர் இவ்வுலகத்தைச் சீர்பெறச் செய்யும் பிள்ளைகளை வளர்த்தல்போல மனத்திருப்தி பயப்பதும் அவ்வளவு சுயநயங்கருதாததும் பிரதிபலனை இச்சியாததுமான வேலை வேறியாதுளது?

மூதாதை:—நீ சொல்லுவதைப் பார்த்தால் மனைவிகள் எவ்வாற்ருனும் புருஷராதரித்தலை எதிர் பார்க்கிறதில்லையென்றே தோன்றுகின்றது.

பௌத்திரன்:—நீவிர் இயம்புவது உண்மையே. மனைவிகள் புருடரையும் பிள்ளைகள் பெற்ருேரையும் சார்ந்திருப்பது அன்பிற்குரிய கடமைகளைச் செய்வதற்கே யொழிய வேறு உதரத்தின் பொருட்டன்று. பிள்ளைகள் வளர்ந்தபின்னர்ச் செய்யும்வேலை மாண்டுபோகும் பெற்ருேர் நன்மைக்கன்றி பொதுநன்மைவிருத்தி செய்வதற்கே உபயோகப்படுகின்றது. ஆகையால் ஒவ்வொரு குழந்தையும் பொதுச்சொத்திலிருந்தே சரியானபடி வளர்க்கப்பட்டு வருகின்றது. ஒவ்வோர் ஆண்பெண் குழந்தையின் சுகவிருத்தியையுங் கவனிக்கவேண்டியது அந்தந்தச் சாதியாருடைய கடமையேயன்றி மற்றவர்களுடைய கடமையன்று. ஆனற் பெற்ருேர்மட்டும் தங்கள் குழந்தைகளைச்சிறுபிராயத்திற் சிறிது

பராமரிக்கின்றார்கள். தனித்தனி மனிதர் தங்களுக்கும் தங்கள் தேசத்தாருக்குமுள்ள நெருங்கிய சம்பந்தத்தினால் பராமரிக்கப்படுகின்றார்களே யொழிய வேறில்லை. இந்தப்பாத்தியம் அவர்களின் தோழமைத் தன்மைக்கு இடையூறாவதில்லை. எவரேனும் உதரகால க்ஷேபத்தினிமித்தம் மற்றொருவர்மேற் சார்ந்திருத்தலானது மனச்சாட்சிக்கு விரோதமாயிருத்தலுமன்றி எந்தநியாயமான சமூகத்துணிபிற்கும் பொருந்தாததாயுமிருக்கின்றது. இவ்வித ஏற்பாட்டில் சொந்த சுவாதீனமும் கௌரவமும் எத்தன்மையவாகும்? நூறுவருடங்கட்கு முன்னர் நீங்கள் உங்களைச் சுவாதீனர்களென்று சொல்லிக்கொண்டதைப்பற்றி நான் கேட்டிருக்கின்றேன். சுவாதீனமென்ற வார்த்தைக்கு முற்காலத்திலுள்ள அர்த்தத்திற்கும் இக்காலத்திலுள்ள அர்த்தத்திற்கும் வித்தியாசமுண்டு. அன்றேல் உங்கள் காலத்தவர்களில் ஏழைகள் செல்வர்கள் பேரிலும், வேலைக்காரர்கள் முதலாளிகள் பேரிலும், மாதர்கள் ஆடவர்பேரிலும், பிள்ளைகள் பெற்றோர் பேரிலும் சீவனம்சத்திற்காகச்சார்ந்திருந்தால் நீங்கள் எங்ஙனஞ் சுவாதீனராவீர்கள்? தேசத்தார் எல்லோரும் ஒன்றுசேர்ந்து சம்பாதிக்கும் பொருளை ஆங்குள்ளோர்க்குப் பங்கிட்டுக் கொடுத்தலே மிகவும் நல்லமாதிரியாயிருக்க நீங்கள் தனித்தனி வேலை செய்து கீழோர் மேலோருக்கடிமைபூண்டு ஊழியஞ்செய்து வந்தது எங்ஙனம்?

முன்காலத்தில் மாதர் புருடர்மேல் உதரத்தின் பொருட்டுச் சார்ந்திருந்தார்களென்பதை யூகிக்கில், அன்பினாலுண்டாகிய விவாகவிடயங்களில் அவர்களுக்குண்டான அந்நியோந்நியப் பற்றினாற் அச்சார்பு கடினமாகத் தோன்றாதிருக்கவேண்டுமே யொழிய, ஊக்கமுடைய ஸ்திரீ

களுக்கு அஃது எப்பொழுதும் கேவலமாகவே இருந்திருக்கு மென்று நினைக்கின்றேன். அஃது அங்ஙனமாயின் விவாக மின்றிச் சீவியத்தின் பொருட்டு ஸ்திரீகள் தங்களைப் புருஷர் களுக்கு விலைசெய்தல் எவ்வளவு இழிவானது? முற்காலத் தவர்கள் தங்கள் சமூகத்தின் அருவருப்பான நிலைகளை உணராதபோதிலும், அஃது ஒரு பெருங்குறை யென்று நினைத்தார்கள். அன்னார் நிலைமையைப்பற்றிப் பரிதபித்தது அவர்களுக்காகவன்று; மற்றுப் பரிதாபத்தின் பொருட்டே. மனிதர் உலகத்தில் விளையும் பொருளையெல்லாம் தாங்களே அபகரித்துக்கொண்டு பெண்களுக்குரிய பகுதியை அவர்கள் ஆடவரிடம் நயமொழிபேசி யாசிக்கும்படியான ஸ்திதியில் வைத்தல் பட்டப்பகற் கொள்ளையும் குரூரமுமென்று அவர் களுக்குத் தோன்றவில்லை. நான் நூற்றாண்டுகட்கு முன்னர் ஏழை ஸ்திரீகள்பட்ட மனவருத்தத்தையும் அவமானத்தை யும் பொருளிழப்பையும் பற்றி மிகவும் சுருக்கமாகச்சொன் னேன்.

முதாதை:— நீ கூறியதெல்லாம் தற்காலத்திலுள்ள புதிய பெண்களைப்பற்றியே யென்று தோன்றுகின்றது. அவர் கள் அச்சமற்று அரங்கஞ் செல்கின்றனர். ஆடவர்கையை யிழுத்துக் குலுக்குகின்றனர். ஆடவர் போன்று ஆடைதரி த்து ஆபீசுகளில் உத்தியோகம் வகிக்க முயற்சிக்கின்றனர். நாணமின்றி நியாய ஸ்தலங்களில் வக்கீல்களாக வர வாதிக் கின்றனர். ஐம்பெருங்குழாங்களிலும் எண்பேராயங்களிலும் தாங்களிருக்க உரிமையுடையோ மென்று பறையடிக் கின்றனர். இவற்றைத்தான் நீயும் பெரிதென்றும் உரிமை யென்றும் பேசுகின்றாய் போலும். காலம் மாறிவிட்டது. கலிகால மாதலால் மனைக்குரிய மாதர்கள் பல்வினைக் குரிய ரென்று நீயும் இயம்புகின்றனை.

பௌத்திரன்:—காலமாறி விட்டது உண்மைதான். பெண்கள் படித்து வருகின்றனர். சிலர் உயர்ந்த பட்டம் பெற்றிருக்கின்றனர். அறிவில் அன்னருக்கும் ஆடவருக்கும் யாது வித்தியாசம். தபாலாபீசுகளிற் பெண்மணிகள் வேலைபார்த்து வருகின்றனர். வைத்தியப் பரீட்சைகளில் மேலான பரீட்சைகளிற்றேறி சிலர் பட்டம் பெற்றிருக்கின்றனர். ஆங்கிலக்கல்வி கற்று அம்மொழியில் அருமையான பாசுரங்கள் அமைத்து வரும் அம்மணிகளுமுளர். நகரவுரிமைபெற முயலும் காரிகைகளின் நன்முயற்சியைப் பற்றி அடிக்கடி வாசிக்கின்றோம். தற்சமயம் நிகழ்ந்து வரும் பெரும் போருக்கு வேண்டிய ஆயுதங்களைத் தயாரிக்கும் பல சாலைகளில் பெண்கள் வேலை செய்து வருகின்றனரென்பது புதினப்பத்திரிகை வாசிப்பவரெவரும் நன்கறிந்த விஷயமே. இரணகளத்திற்கும் அஞ்சாது சென்று ஆங்குக் காயப்பட்டுக் கிடக்கும் வீரர்களுக்குச் சிகிச்சை செய்துவரும் மாது சிரோமணிகளுமுளர். இவற்றையெல்லா மாலோசிப்போமாயின், யாமிதுவரை யபகரித்தாண்ட பெண்களினுரிமையைக் கணமுந்தாழ்க்காமல் மனதுடனளித்தல் பெருமையாம். நகரவுரிமைக்காகப் படாதபாடுபட்ட பாங்குஹர்ஸ்டு காவல் மடவார்களின் பெருமையை எவ்வாறு கூறுவம்! காயப்பட்ட யுத்த வீரர்களைப் பாதுகாத்த நைட்டிங்கேல் அம்மையின் வீரத்தையும் காருண்யத்தையும் மெச்சாதவர் எவர்? இணையற்ற சரோஜினி யம்மையாக்கிய பாசுரங்களை வியவாதவரெவர்? சட்ட நிபுணராகிய பார்சி சோராப்ஜி யம்மையைப் பெருமையாகப் பேசாதவர் எவர்? நானுவிதங்களிலும் பெருமைவாய்ந்த மாதர் மணிகளை அங்கீகரிப்பது நம் கடமை யன்றோ?

இந்த சம்பாஷணை முடியும் வரை அனைவரும் அன்புடன் கவனஞ் செலுத்தி வந்தனர். இரவில் முதற் சாமங் கழிந்தது. சபையுங் கலைந்தது. அன்றிரவில் அகாலமாய் விட்டபடியால் பழவூரில் தங்கிய அயலூர் ஆடவர்க்கும் மங்கையர்க்கும் அவ்வூரார் சம்பிரமமாக விருந்தளித்தனர். நித்திரா தேவி இனிப்பொறேனென்று தன் னரும்பெரும் வலையை வீசினள். நிசப்தமாய் அனைவருந் துயின்று அருணோதயத்தில் அவரவரூர் நோக்கிச் சென்றனர்.

"குஞ்சி யழகுங் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்ச ளழகும் அழகல்ல—நெஞ்சத்து
நல்லம்யா மென்னும் நடுவு நிலைமையால்
கல்வி யழகே யழகு."

---

## பத்தாம் பகல்.

இன்று விஜயதசமி. விஜயையாகிய துர்க்கைக்குப் பூசைசெய்து விஜயனுகிய அர்ச்சுனனருள் பெற்ற தினம் இது. இதுவே சரஸ்வதி பூசைக்குமுரிய நாள். ஆயுத பூசைதினமும் இன்றே யாதலின் இன்று முற்பகலில் பழவூர் வாசிகள் அர்ச்சுனன் பெருமையைப் புகழ்ந்தும், வெள்ளைக்கலையுடுத்து வெள்ளைப்பணிபூண்டு வெள்ளைக்கமலத்தில் வீற்றிருக்குந் தாயை நினைத்துச் சகல கலாவல்லி மாலையை வாசித்து மகிழ்ந்தும், தங்களுக்கு உணவளித்து வரும் ஆயுதங்களை வைத்துப் பூசித்தும் வந்தனர். பிற்பகலில் முன்னர் வெளிப்படுத்திய அறிக்கைப் பத்திரத்தின் பிரகாரம் அனைவரும் நாலுமணிக்குச் சித்திரசபை வந்து குழுவினர். பதின்மரும் வழக்கம் போல தங்கள் தங்கள் ஆசனங்களிலமர்ந்தனர். சபைத்தலைவராகிய சம்பூரணருடைய பிரசங்கத்தையும் முடிவுரையையுங் கேட்கவும், அற்புதமான நவராத்திரிப் பிரசங்க சபையாரைக் கனப்படுத்தவும் கனவான்கள் அநேகர் வந்திருந்தனர். சம்பூரணர் எழுந்து:

"சிவநேசச்செல்வர்களே, நாமகளின் நண்பர்களே, வந்தனம். சென்ற ஒன்பது இரவுகளிலும், இன்றும் வந்திருந்து எங்களைக் கனப்படுத்திய உங்களுக்கு என்ன கைம்மாறு செய்ய வல்லேம். காருண்யமுள்ள எம்பிரான் உங்களுக்கும் உங்களுடைய வமிசத்தார்க்கும் கருணைமழை பொழிவாராக. இன்று யான் சொல்லக்கருதிய விஷயம் நூல்விழைவு என்பதாகும்."

## நூல் விழைவு.

இயற்கையிலேயே யாவரும் பேரவாக்கொண்டு, உலகத்திலுள்ள சகல சுக செல்வங்களிலும் விசேடித்ததாக மதிக்குமாறு மேற்பட்டு நிற்பது கல்வியாம்.

" கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு
மாடல்ல மற்றை யவை"

என்றவாறே அது இருபாலார்க்கும் உரியது. அதன் முன் உயர்ந்த மாணிக்காதி இரத்தினங்கள் பரற்கற்களே யெனத் தாழும்; தூய உருக்கு வெள்ளி அற்பமான வெண் மண்ணுங்கட்டியே யென மாறும்; தேவலோகத்துள்ள ஆயிரத்தெட்டு மாற்றுயர்ந்த நால்வகைப் பொன்னினு மேற்பட்ட சுவர்ண சுத்தப்பொடிகள் சமுத்திரக்கரை மணற்குவியலேயென மதிக்கப்படும். இக்கல்வியொளியைக் கண்ட கண்ணுக்குச் சூரியசந்திராதியர் மாசுபடிந்த வட்டச்சேகண்டிகளேயாவர். இதன் இனிமைக்குத் தேனும் அமுதுந்தீண்டாவேம்பே. கருத்தூன்றி நோக்குங்காற் காலவளர்ச்சியினும் அது குறைவின்றி மனமாசகற்றி விளக்கிச் சுசீலாதிகளை என்றும் விளைவிக்கும். அன்றியும்

" மாவு மாக்களு மையறி வினவே
மக்க டாமே யாறறி வுயிரே"

என்றபடி பகுத்தறிவுடைய ஆன்மாக்களாகிய நம்மை அது மகாபதவியிற் சேர்க்கும் பேரளியேயாம். அதுதேவாதியர்கட்கும் தெவிட்டாத ஞானமிர்தமாகி அருந்தவருந்த அதிக விருப்பத்தையே யூட்டித் தானே திவ்விய பானமுமாகி, தன்னைப் பருகுவோருக்கு எட்டுணையேனும் உவர்ப்புண்டாக்காததாம். மஹாசஞ்சலப்படும் இதயத்திலும் அது

ஆநந்தத்தை யுண்டு பண்ணும். அன்றியும் அது சமாதான சம்பந்தத்தைப் படைத்துச் சன்மார்க்கத்துக்கு விதியாகி எவ்வாற்ருனுந் தன்னையடுத்து நடப்பார் அணுப்பிரமாண முந் தவத்திற் றவருதபடி நடாத்துந் தண்ணளியையுமுடைத்து. அரையர்களைச் செங்கோன்மைக்கட் படுத்துவதும், ஸ்மிருதி கர்த்தாக்கட்கு ஸ்மிருதியின் நீதியைத் தெளிப்பதுங் கல்வியே. தீமைப் பண்பாகிய முள்ளரிப்பூண்டை வேரோடரித்து அழிப்பதும், அநாகரிகத்தையழித்தொழிப்பதும், சாதுரிய நய வற்புத வசனத்தை மேம்படுத்துவதும், பருப்பதத்தின் உன்னத சிகரத் தீபதோற்றமே போன்று பிரகாசத்தைத் தருவதும், அதனையடைந்தோர் தெள்ளியபெரியராகவும் அரச பூஷண நேயராகவு செய்விப்பதும் மறுவறு கல்வியன்ருே? அரசர் மந்திரிய ராதியர்க்கு ஓங்கிய இத்தீங் கல்வியாகிய வாளும் வேலும் இன்றேல், இவர்பாற் கண்ணியகாரண மேன்மைக்கு உளவாம் எஃக் வாள் வேல் ஆதியபடைகள், அற்ப உழவினர் சொற்பக் கொழுக்களும், விறகுத்தலையரின் வெட்டரிவாட்களும் ஆவதன்றி, அன்னப்பிடியும் வெல்லப்பிடியாகுமன்ருே? ஆதலின் மகா வல்லபத்திற்கும், விருப்பக் கிளர்ச்சிக்கும் உரிய கலையாகிய சேமிக்கப்பட்டவைப்பு ஐயமகன்ற சத்தியப் பிரமாணத்தோடு கூடிய புத்தக மன்றி வேறியாது? சைவ வைஷ்ணவ சீலர்களால் முறையே திருமுறை சீகோச மென அழைக்கப்பட்டதும், பாண்டியர்களாற் பெரிதுங்காக்கப்பட்டதும், துரோணுசிரியற்கும் சகாதேவனுக்கும் துவசமா நின்றதும், "பாடையேறினும் ஏடதுகைவிடேல்" "புத்தகம் அத்தபூடணம்" எனப் பழமொழியேற்றதும் புத்தகமன்றி வேறு எத்தகைக் கருவியாம்? அஃதே உயர்வினுயர்வும், ஒளியினெளியும், சீவியகிரந்தமுமாக நின்று கலையை உலையாது காத்துவருகின்றது. அதுவே அறிவினுயர்வை வினவு

வார்க்குந் தேடுவார்க்கும் திருநிலையாகித் தீர்க்கவிடையுந் தெளிபொருட்பேறுந் தருகின்றது. புத்தகமே மாணவர்கட்கு வானசோதி மண்டலங்களின் மகிமைகளையும், எட்டுத்திசையும் பதினாறு கோணமு மியைந்த வனைத்தையுங் கண்கூடாக நிமிடத்திற் காட்டிக் களிப்பிக்கின்றது. ஒன்றென்றும் இரண்டென்றும் மூன்றென்றும் நான்கென்றும் சாகைகளா லளப்பிலவென்றுங் கூறப்படும் வேதரூபமார்க்கமாய்த் தெய்வமுமிதிலடங்கியன்றோ துதித்து வணங்கப்படுகின்றது? அன்றியும் புத்தகங்களிலன்றோ சுவர்க்க நிரய விஸ்தாரங்கள் காணப்படுகின்றன.

"ஊர்வ பதினொன்றா மொன்பது மானுட
நீர்பறவை நாற்காலோர் பப்பத்தாஞ்—சீரிய
வந்தமாந் தேவர் பதினன் கயன்வகுத்த
வந்தமில் சீர்த் தாவரநா லைந்து"

என்னுஞ் சராசரங்களின் நிலைமைகளையும் மேலான ஞானத்தையும் வேறெங்குக் கண்டோம். சுவடிகளிலே, வேற்றுலகம் புக்கபெரியாரை அவரவர் ஆன்ம சரீரத்தோடு முக முகமாகத் தரிசித்து ஆங்குக் கண்டு ஆநந்தித்துக் கடந்தவற்றோடு இனிக்காலாந்தரங்களில் வரவிருப்பனவற்றையும் களங்கமறு கண்ணுடியிற் காண்பதுபோற் கண்டுகளிக்கின்றோம். அந்தோ! காலசமுத்திரத்துள் எத்துணையரிய கலைவல்லோர் வீரர் புண்ணிய புருடராதியரின் வியப்புக்குரிய செயலும் சீர்த்தியும் மூழ்கித் தோற்றாது போயின. அங்ஙனமாகவும் வேண்டுவனவற்றிற் பலவற்றை நிலைநிறுத்தி எமக்குத் தெரிவித்து நிற்பன அச்சு வடிவ அச்சுவடிகளேயன்றி வேறு யாவுள?

அகத்தியன் பாணினி முதலான இலக்கண சாத்திரிகள், தேரையன் மச்சமுனி போன்ற வைத்திய சாத்திரிகள், மநு யாக்கியவற்கியன் அனைய நீதி சாத்திரிகள், பதஞ்சலி சாக்கி

யனையொத்த யோகசாத்திரிகள், நளன் வீமன் நிகரான பாக சாத்திரிகள், மரீசி புருகுச்சன் ஆதிய சோதிட சாத்திரிகள், இன்னும் தருக்க - தத்துவ - வேதாந்த சாத்திரிகள் பெயரோடு, வள்ளல்கள், சக்கிரவர்த்திகள், அறவோர் துறவோர் முதலானோர் நாமமும் இப்பனுவல்களின்றேல் மறைந்தன்றோ வொழியும்? எத்தனையோ உயர்ந்த கோபுரங்களும், ஓங்கிய மாடமாளிகைகளும், ஒப்பற்ற பட்டணங்களும், ஒள்ளிய தீவுகளும், கால்சாய்ந்து தரைமட்டமாகி இன்ன ஸ்தானத்திருந்தனவென்ற சுட்டுக்கும் இடமின்றாய்த் தோற்றாதொழிந்தனவே!

வித்துவவேந்தர்களின் புகழுடம்பு அவராலியற்றப் பட்ட புத்தகங்கண் மூலமாய்ப் பொற்பழிந்திலதே. இதனன்றோ,

> "கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினு
> மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான்—மலரவன் செய்
> வெற்றுடம்பு மாய்வனபோன் மாயா புகழ்கொண்டு
> மற்றிவர் செய்யு முடம்பு"

என்று பெரியாருங்கூறினர். இப்பால், பிராசீன நவீன விடயங்களை அழிவற்ற கிரந்தங்களின் மூலமாகக் கிரகித்துக் கொள்ளும் வித்துவ சமூகத்துள்ளும் எவர் புத்தகத்துக்குச் சரியீடு காட்ட வல்லார்?

சத்தியஞ் சிறந்ததே; அது மானுடர் மேலா மதித்து விரும்பும்

> * "கனியினுங் கட்டி பட்ட கரும்பினும்
> பனிமலர்க் குழற் பாவை நல்லாரினுந்
> தனிமுடி கவித் தாளு மரசினு
> மினிய சோம ரசத்தினு மேன்றதே."

* கடைசியடி மட்டும் மாற்றி இசைத்துக் கொள்ளப்பட்டது. திருநாவுக்கரசு சுவாமிகள். திருவிடைமருதூர்.

ஆதலின், இச்சத்தியத்தின் பெருமை மேலோரான் உயிரினு மேலாகவே கொள்ளப்பட்டது. சிநேக வாச்சலியச் சீரின் புனித மகத்துவமும் இதனிடத்தே யுள்து. நிலைப் பட்டது இதனையன்றி வேறுமுண்டோ? பெரியோர், இதய மூலம் - வாய்மூலம் - இலிகித மூலம் என்ற மூன்று நிலைக் களம் இதற்குள வென்பர். அவற்றுள் இதய மூலம் வெளிப்படா ஞானமாய்ப் புதைந்தழி பொருள் போலாம்; வாய்மூலம் பேச்சேயாகி ஆகாய விரிவில் அழிந்தொடுங்கு மன்றே. இலிகித மூலமோ என்றுங் காத்து வைத்தபடி அவ்விரண்டையுந் தழுவிக்கொண்டு யாவருக்கு முபயோக மாம். இவ்விலிகித மூலம் புத்தகரூபமேயன்றோ?

" கோடன் மரபே கூறுங் காலைப்
பொழுதொடு சென்று வழிபடன் முனியான்
குணத்தொடு பழகி யவன் குறிப் பிற்சார்ந்
திருவென விருந்தே டவிழென வவிழ்த்துச்
சொல்லெனச் சொல்லிச்......
சித்திரப் பாவையி னத்தக வடங்கிப்......
போவெனப் போதல்......"

" அழலி னீங்கா னணுகா னஞ்சி
நிழலி னீங்கா னிறைந்த நெஞ்சமோ
டெத்திறத் தாசானுவக்கு மத்திறம்
அறத்திற் றிரியாப் படர்ச்சிவழி பாடே"

எனக் கூறப்பட்டுள்ள பற்பல கஷ்டங்களை யாமடையாது நமக்கடிமைபோன் றிருந்து நம்மாட்டுப் பொருள்விருப் பாதிய நீத்துநின்று கலைபலதெளிக்குங் காரணகுரு புத்தகம் புத்தகமேயாம்.

நூல் என்பதைப்பற்றிப் பரிதிமாற் கலைஞன் தந்தருளிய தனிப்பாசுரம் பின்வருவதாம்.

"சீலஞ் சிறந்தொளிர் நூலென் பதுதா
னியற்கைப் பொருள்களி னினிய காட்சியாம்;
பெயற்கார் குழீஇமழை பெய்தலுங் கற்றோ
ருள்ளச் செறுவி னுறுவிதை முளைத்துத்
தள்ளரும் பயிராய்த் தழைத்துக் கவியெனுங்
கதிர்க்குலை யீன்று கவின்றொடர் நிலைப்படூஉ
முதிர்ச்சிசால் புலவர் முறகளஞ் சென்றவட்
சொல்வினி தாய்ந்தபின் றொகுத்துய்த் திட்டநல்
லில்லமே யன்றோ வென்போ லியர்க்கு?
மாணவர் மனக்குடி பேணுபுத் தகமும்
பாவல வண்டர் படிதே மலரு
மாவலி னுடேர்க் கன்புறு பொழிலுங்
கனிவுசேர் காரண குருவும்
பனுவ லென்னப் பகருமஃ தன்றோ?"

பாசுரம் படித்தானவுடன் ஆண்டுக்குழுவிய அனைவரும் கைதட்டி மகிழ்ந்தனர்.

## முடிவுரை.

பழவூர்வாசிகளே, இன்னுமோர் கடமை எனக்கு ஏற்பட்டுளது. ஒவ்வோரிரவிலும் நடந்தேறிய பிரசங்க வியாசங்களைப்பற்றி என் சிற்றறிவிற்கெட்டியவாறு சிற்சில குறிப்புக்களை யிவண் தருதல் மரபாதலால் அங்ஙனஞ் செய்யப் புகுவேன். அரசபக்தியை வியந்த ஆதித்தர் கருத்துப்படி குடியுங்கோலு மொன்றுதலால் குடிகள் இறைவனை வணங்குதல் இயல்பேயாம். "ஆழியானுயினுஞ் செங்கோலனல்லாக்காற் சேர்ந்தாருமெள்ளுவர்" என்னும் முன்றுறையரையனர் முதுமொழியை நீங்கள் அறிவீர்

கள். இரண்டாமிரவில் நம்மவர் குறைகள் இத்தன்மையன வென்று நிறைமதியார் கூறினர். பிறர் குறைகளை நீக்க முயலுவர் விழுமியோர். நங்குறைகளை நமக்கெடுத்தோதல் 'கொற்சேரித் துன்னூசி விற்றல்' போலென்று உரை முடிவுகாணுவிளமையோர் நினைக்கலாம். அது அற்றன்று. உலகெங்கும் ஒளிபரப்புஞ் சந்திரனுக்குத் தன்னகத்திலுள்ள மறு தோன்றாதது போன்று நம்மிடமுள்ள குறைகள் நமக்கு எளிதிற் புலப்படாவாம். சீரியர் அவற்றை உண்ணோக்கி யுணர்ந்து வெளிப்படுத்துவர். உட்புண்ணையகற்றாவிடின் அது உடம்பையரித்து உயிரையகற்றுமன்றோ? ஐக்கியமும் அவநம்பிக்கை யின்மையும் அன்பும் பொறையும் ஆன்றகுடிகட்கு ஆபரணங்களாம். செவ்வாயன்றுசெவ்வியார் செய்த பிரசங்கத்தின் மணம் என்றுங்கமழும். நாயனும் நங்கையும எதிர்ப்பட்டு உடனுலாவிச் சம்பாஷணை செய்து மனமொத்த பின்னரே வரித்தல் முறை யென்று பறையறையுமிக்காலத்தில் இத்தகைய பிரசங்கத்தாற் பயனுண்டா மென்பது திண்ணம். "நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்." யாமெடுக்கும் எம்முயற்சியுமீ வியர்த்தமாகலாம். எங்குமீசனுளனென்பவருக்கும், எல்லாம் இறைவனருள் என்பவருக்கும் இடர் வராது. இல்வாழ் பேயென்றும், கூற்றமென்றும், அரும்பிணியென்றும், கொண்டானைக் கொல்லும்படையென்றும், இகழப்பட்ட வாழ்க்கைத்துணை ஒருவனுக்கு வரின் அவனைப் பாவி யென்றே கூறத்துணியலாம். 'கூறாமற் சந்நியாசங் கொள்' என்றவாணையைப் பின்வருஞ் செய்யுளும் வற்புறுத்தும்.

> "உடையான் வழக்கினிது, ஒப்பமுடிந்தான்
> மனைவாழ்க்கை முன்னினிது, மாணதாமாயின்
> நிலையாமை நோக்கி நெடியார் துறத்தல்
> தலையாகத் தானினிது நன்கு"

"ஒப்பமுடிந்தான் மனைவாழ்க்கை முன்னினிது." மனையாளுள்ளமுங் கொழுந னுள்ளமும் வேறு படாது பொருந்தின் மனைவாழ்க்கை மிகவினிது. மாட்சிமைவாய்ந்த மனைவாய்த்தல் அருமையேயாம். புண்ணியஞ்செய்தவரே மங்களமான மனைமாட்சிபெறுவர். அடுத்த இரவில் வாழ்க்கைத் தொல்லைகளைப்பற்றி யற்புதமான வாசகம் நிகழ்ந்தது. வாழ்நாளின்பஞ் சிறிதென்றும் தொல்லைகள் பலதரத்தன வென்றும் பாவலர் கூறியுளர். "அணிதேர் புரவியாட்பெரும் படையொடு மன்னரிருக்க" நிழலை யளிக்கும், ஆலமரமொன்று நடுக்காட்டில் நின்றது. வேட்டையாடச் சென்ற வொரு சிற்றரசனை ஒரு பக்கலிற் புலிதுரத்த மற்றெதிர் பக்கலில் அவன் யானை வரவைப்பார்த்து வெருண்டு வலசாரி யிடசாரியாக வெகுநேர மலைந்தும் மலைந்து ஆலமரத்தின் விழுதைப்பிடித்துக் கடைத்தேற வுன்னினன். விழுதைப் பிடித்தபின் அவன் கண் ஏறப்பார்த்ததும் விழுதைக் கருகருவென் றருத்துக் கொண்டிருந்த எலியைக்கண்டான். கீழேகுதித்து விடலாமென்றால் பாழுங்கிணற்றிற் படம் விரித்துக் கொண்டு பாம்பு தலை தூக்கிநின்றுடியது. இவ்வாறு மரணவஸ்தைத் தருவாயில் ஆலமரக்கொம்பிலுள்ள தேன்கூட்டினின்று ஒரு சொட்டுத் தேன் மேனோக்கியவன் உதட்டிற் பட்டது. அவஸ்தையனைத்தையும் அக்கணமே மறந்த அரசன், 'இனிமை இனிமை இதற்கிணையெங்குளது' என்று சுகித்தான். இதற்கொப்பது உலகவாழ்க்கை யின்பம். இதனையறிந்து நல்வழிப்பட்டு நாதனையடுத்தல் நம்கடமையாம். நாதனை யடுப்பவருக்கு நிலைபெற்ற ஆயுள்கிடைக்கும். சற்குரு மொழிந்தவாறு நமக்கு நாளுக்குநாள் நலம் பெருகும். விருத்தியடைவோம். பெருவாழ்வு பெறுவோம். குறுகிய வாணாளிற் பெறினும் பெருவிடினும் பெறுவோமென்ற நம்பிக்கை

யொன்று பிறக்குமாயின் அது மனத்தை யூக்குவிக்கும், பல தொழில்களில் தளராதிருக்கத் தூண்டும், பரமபதம் பெறும் பாதையைப் பகுத்துக் காட்டும். ஜெப்பானியர் வரலாற்றைத் தந்த சுக்கிரர் கருத்தெல்லாம் நாமும் அவர் போன்றே சிறப்புற்று ஓங்கவேண்டு மென்பதே. அதற்குத் தக்க சாதனங்கள் அமைய வேண்டும். கல்விபரவவேண்டும். அகவிருளை யகற்றவேண்டும். பொருண் முறைநூல் கற்றல்வேண்டும். பெரும்பொருளீட்டல் வேண்டும். படைக் கல்வி பயிலல் வேண்டும். சகோதரவுண்மை பெருகவேண்டும். சகோதர வுரிமை சிறக்கவேண்டும். இறைவன் பெருமையை யுணரவேண்டும். ஈசனருளைக் கவரவேண்டும். இவையனைத்துங் கைகூடுமெனின் 'நாமார்க்குங் குடியல்லோம், நமனையஞ்சோம்' என்ற திருநாவுக்கரசரின் துணிவு நமக்கு முண்டாம். காடு நாடாம், நாடு நலம்பெறும். சனியிரவில் நிகழ்ந்த பிரசங்கத்தின் பெருமையை யளத்தலரிது. நன்மை நாடின் நன்மை நிகழும். நன் மனமுண்டேல் நாதனுந் துணைசெய்வான். சனிபதியுரைத்தவாறு நல்ல காலத்தில் நல்லுரை காதிற்படும், நலனிழந்தோரும் நன்னடையெய்துவர், புலனழிந்தோரும் புன்னடை களைவர். இவற்றிற்கு அறிகுறியாய் ஒலிப்பது அசரீரியாம். கேதுருவின் பிரசங்கம் கேதமற்று விளங்கும். பேதையர்கள் துன்பம் வந்துறுங்கால் பிராணனைப் போக்குதல் சகசமாம். ஒரு விநாடியூன்றி நினைப்பரேல் அவர் தற்கொலை புரியார். தற்கொலைபுரிந்தவருக்கு இகத்தில் தண்டனையில்லை. தம்முயிரைவிட யத்தனிப்பவருக்குச் சட்டம் தண்டனை விதிக்கும். 'மானம்பட வாழாமை முன்னினிதே' என்றார் முன்னோரும். கவரிமானையொத்த மானிகள் மானத்துக்கஞ்சி யுயிர்துறப்பர். மானம்மேல் என்னும் மதியிலிகள் தொல்லைகளுக்கஞ்சி உயிரினைத் தொலைப்பர். இழைத்த நாளெல்லை யிகவாதென்

றுணர்ந்த யூகிகள் உண்மையை ஆய்ந்து தத்தங்கடமை யைச் செய்வர். சந்திரனை விழுங்கும் பாம்பை இராகு வென் பர். சந்திரனை யொக்கும் இந்திராணிகளின் உரிமையைக் கொடாது அபகரித்துச் சேமித்துவைத்த வம்பர்களாகிய நம்மடமையை விழுங்கினள் இராகை யெனப்படும் மங்கை யரசி. மாதர் சுதந்திரங்களை இவள்போன்று விளக்கிக் காட்டி எம்போலியரைத் தலைகுனிய வைத்த பெருமாட் டியை நானிதுவரை கண்டிலேன். நங்கையருக்கு நற்காலம் வந்ததுபோலும்! இம்மாதே நாமகள், கலைமகள், சகல கலா வல்லி யெனலாம்.

இதுகாறும் நிகழ்ந்த பிரசங்க வியாசங்களைப்பற்றி என்னுலியன்றவாறு சிறிது கூறினேன். என் நண்பர்களா கிய ஒன்பதின்மருக்காகவும் எனக்காகவும் இரண்டொரு வார்த்தைகள் சொல்லி என்னுரையை முடிப்பேன். நவ ராத்திரி விடுமுறை காலத்தில் இவ்வாறு பிரசங்கங்கள் நிகழுமாறு தோன்றாத் துணையாயிருந்து பழவூர் வாசி களுக்கு உற்சாகத்தை யுண்டுபண்ணி எங்களுக்குப் பேரு தவி செய்ய ஊக்குவித்த நஞ்சுண்டகண்ட னிணை யடியை நாடோறும் நாண்மலரும் நீருங்கொண்டு போற்றுவோமாக. பழவூர் வாசிகள் பல்லாண்டு பெருகி வாழ்வாராக.

காரொளிய திருமேனிச் செங்கண் மாலுங்
கடிக்கமலத் திருந்தயனுங் காணவண்ணம்
சீரொளிய தழற்பிழம்பாய் நின்றதொல்லைத்
திகழொளியைச் சிந்தைதனை மயக்கந்தீர்க்கும்
ஏரொளியை யிருநிலனும் விசும்பும் விண்ணும்
ஏழுலகுங் கடந்தண்டத் தப்பால் நின்ற
பேரொளியைப் பெரும்பற்றப் பழவூரானைப்
பேசாதநாளெல்லாம் பிறவா நாளே.

இப்பாசுரமோதி முடிந்தவுடன் எழுந்து நின்ற சிவச்செல்வர்களனைவரும் உட்கார்ந்தனர்.

சங்கரர் வந்தனம்.

பழவூர்த்தலைவராகிய சங்கரர் முன்வந்து, “ஐயன்மீர், இப்பத்துத்தினங்களிலும் எம்போலியர்க்கு அரும்பெரும் விஷயங்களைக் கசடற விளக்கிக்காட்டிய தங்களை இவ்வூரார் எழுமை யெழு பிறப்பு முள்ளவர் என்பதற்கு ஐயமின்று. பயன்றூக்காது செவியுணவு தந்த தங்கள் பெருமை ஞாலத்தினுங் கடலினும் பெரிதென்பதி லென்னதடை. வேளாண்மை எவ்வெவர்க்கு முரிமையாயினும் கேளாண்மையுடைய தங்களுக்குத் தாழாண்மையுடைய பழவூராராகிய நாங்கள் விருந்தோம்பு முறைதவறிக் குற்றப் பட்டிருப்பினும் பொறை செய்து மன்னிக்க வேண்டுகின்றேன்.

“எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார்
பெரியார்ப் பிழைத் தொழுகுவார்”

எங்கள் பிழைகளைப் பொறுத்து எங்களுடைய தினைத்துணை யுபசாரத்தைப் பனைத்துணையாகக் கொள்ளும் மாசற்ற தங்கள் கேண்மையை என்றும் மறவோம்.



“ பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டுபவர்”

என்பது பொய்யாமொழியன்றோ ?

“ கூவ லாமை குரைகட லாமையைக்
கூவலோ டொக்குமோ கடலென்றல் போல்
பாவகாரிகள் பார்ப்பரி தென்பரால்
தேவதேவன் சிவன்பெருந் தன்மையே.”

இங்கு வந்து குழுவி எங்களைக் கனப்படுத்திய பக்கத்தூர் நண்பர்களுக்கும் நாங்கள் வந்தனம் அளிக்கின்றோம்” என்று முடித்தனர்.

முருகனடி சிறக்க.

PRINTED BY S. MURTHY AND CO., AT THE "KAPALEE" PRESS MADRAS.

